ஓம் பரப்பிரம்மணேநம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு

"எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) [REGISTERED]

| கமலம்-3. | சென்னை: விபவஸு பங்குனிமீ 1௳ | இதழ்-36. |
|---|---|---|
| Vol. 3. | 1929-ம்ஸு மார்ச்மீ 12௳ | No. 36. |




"ஸர்வலோக நாயகராகிய" ஸர்வேசுவரனை ஸதா பிரார்த்திக்கக் கடவோம். "பார்த்துத் தெளியுங்கள், நீங்கள் பார்த்துத் தெளியுங்கள்" என்றொரு பக்தர் பாடியிருக்கிறார். பகவான் நல்லோரைக் காப்பவர். அதமர்களை யழிப்பவர். துஷ்டர்களுக்கு அவரே எமனாகின்றார். கோரிய பிரகலாதனுக்குப் பிரம்மமானார். தம்மை எதிர்த்த இரண்யனுக்கு நரசிம்மமானார். நம்பிய விபீஷணற்கு ராமனானார். எதும் தம்பி சொற்கேளாத ராவணற்கு எமனானார். பக்தி செய்த பாஞ்சாலிக்கு அவள் மானத்தைக் காத்துக் கண்ணனானார். அசத்திய துரியோதனர்க்கோ ஸம்ஹார மூர்த்தியானார். பாவித்த யசோதைக்குப் பாலகனானார். கோபித்த கம்ஸனுக்குக் காலனானார். வந்தித்த பாண்டவருக்குத் தொண்டனானார். நிந்தித்த சிசுபாலனுக்கு வைரியானார். ஆகவே, எவருடைய நாமஸ்மரணையானது ஸகல பாபங்களையும் போக்கடிக்குமோ, எவருடைய பாத பத்மங்கள் ஸம்ஸாரமாகிய ஸாகரத்தில் விழுந்து தவிக்கும் ஜனங்கட்குத் தெப்பக்கட்டை போலாகி முக்தி யென்னும் கரையை யடைவிக்குமோ, எவருடைய ஸேவையானது நித்ய ஸந்தோஷத்தைத் தந்து கொண்டிருக்குமோ அப்படிப்பட்ட ஆதிமூர்த்தியை ஸதா தியானம் செய்யக் கடவோம்.

---

☞ அடுத்த புது வருடத்தில் பத்திரிகை வேண்டாமென்போர் தயவு செய்து உடனே தெரிவித்துவிட வேண்டுகிறோம். மௌனமாயிருந்து வி. பி. வந்ததும் திருப்பிவிடுவது கொடுமையிலும் கொடுமை. ஆதலின் உடனே அறிவித்துவிடுதல் உத்தமம்.

"சித்த சுத்தி ஸர்வ சித்தி." ஸகல கர்மங்களும் சித்த சுத்திக்காகச் செய்யப்படுகின்றன. காம்ய கர்மங்களால் மோக்ஷம் ஸித்தியாதென்பது நிச்சயம். எதற்காக தான தருமங்கள் செய்கிறோம், எதற்காக ஸத் கர்மங்களை யனுஷ்டிக்கிறோம் என்பதை ஒருமுறை யோசித்தால் சித்தத்தை சுத்தப்படுத்தி ஆத்ம ஞானத்தை யடைவதற்கென்று தோன்றும். அழுக்கு படிந்த கண்ணுடியில் முகத்தின் பிரதி பிம்பம் தோன்ருது. அதுபோல் பொய், சூது, வஞ்சனை முதலிய அழுக்குகள் படிந்த சித்தத்தில் ஜீவன் தன் ஸ்வரூபத்தை யறியமாட்டான். அப்படிப்பட்டவனுக்கு ஆத்மஞானம் உண்டாகாது. இதை யறியாமல் காசிக்குப் போய் வந்தோமென்றும், கங்காதீரத்தில் பலவித தானங்களைச் செய்தோமென்றும், வைதீக காரியங்களைக் குறைவின்றி யனுஷ்டித்தோமென்றும் நினைத்துக்கொண்டு அகமகிழுவதில் பிரயோஜனமில்லை. அவைகளால் சித்தம் சுத்தமாவது நிச்சயமே. ஆயினும் மறுபடியும் சூது, வஞ்சனை, பொருமை முதலிய துர்க்குணங்களை மனதிற் புகுத்தி அசுத்தப்படுத்தி விடுவதால் என்ன பலனுண்டு? ஒருதரம் சேற்றில் விழுந்து தண்ணீரால் சுத்தமடைந்தவன் மறுபடியும் சேற்றில் விழுவது மதிக்குறைவன்ருே? இதனுல் முன்பு ஜலத்தால் சுத்தி செய்து கொண்டது நிஷ்பிரயோஜனமாகத் தானே ஆயிற்று? பசியோடிருப்பவனைப் பார்க்கிலும் வயிரார உண்டு உடனே வாந்தியெடுத்துப் பசியால் துன்பப்படுவோன் புத்திசாலியோ! அவன் நிலைமையைக் கண்டு யார் தான் பரிதாபப்படார்? ஐயோ! அன்னம் கிடைத்தும், அதையுண்டும், ஜீரணித்துக் கொள்ளாமல் வெளியே யெடுத்து விட்டானே யென்று எல்லோரும் அவன் விஷயமாய் வியஸனப்படுவர். அதுபோல் ஸத்கர்மத்தைச் செய்யும் புத்திமான் மறுபடியும் துஷ்கிருத்தியத்தால் சித்தத்தை அசுத்தப்படுத்திக் கொள்வது வெகுவாய்ப் பரிதபிக்கத்தக்க விஷயம்.

***

"குரு கடாக்ஷம் அவசியம்" எத்தனை ஸமர்த்தனுனாலும், குருவை ஆசிரயிப்பதும் அவருடைய கடாக்ஷத்தைப் பெறுவதும் அதியவசியம். குருவின் கிருபை யென்னும் தெப்பக் கட்டையிருந்தால் ஸம்ஸாரமாகிய ஸாகரத்தில் முழுகாமல் நீந்தக்கூடும். அஃதில்லையேல் கையோய்ந்து, காலோய்ந்து சில நேரத்தில் தண்ணீர்க்குள் அமிழ்ந்து விடுவோம். இவ்வுண்மையை யறியாமல் அநேகர் ஆசாரியர்களிடத்துப் பக்தி குன்றி நிற்கின்றனர். இதனுல் ஹிருதயம் பிரகாசமற்று ஸங்கடம் ஸம்பவிக்குமென்று அவர்கள் அறிவதில்லை.

***

"சாந்தம், கோபம்" ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு மந்திரிகள் இருக்கின்ருர்கள். ஒருவன் பெயர் சாந்தன். மற்ருெருவன் பெயர் கோபி. சாந்தனுடைய வார்த்தையைக் கேட்டால் ஐசுவரியமும், பிறரால் பூஜ்யதையும், மனதிருப்தியும், ஸத்கீர்த்தியும், தீர்க்காயுளும் உண்டாகும். கோபியின் வார்த்தையைக் கேட்டால் கௌரவக்கேடும், பொருளழிவும், அபகீர்த்தியும் ஸம்பவிக்கும். இவ்விஷயம் ஒவ்வொருவருடைய அநுபோகத்திலும் ஸதா பிரகாசித்துக் கொண்டேயிருக்கிறது. ஆயினும் எந்த மாயையோ, மந்

---

"அமிர்த குணபோதினி"ப் பத்திரிகைக்கு நாம் இன்றே புது வருஷ சந்தாவை அனுப்பிவிடுவோமென்று மனேவுறுதி செய்துகொண்டு, அவ்விதமே அனுப்பிவைத்துப் பஞ்சாங்கப் பரிசையும் ஏற்றுக்கொள்ளுமாறு நமது அன்பர்களை வேண்டுகிறேம்,

திரமோ, அக்ஞானமோ மனதை இருள் சூழ்ந்து ஸாந்தனுடைய இருப்பிடம் தெரியவொட்டாமல் மறைத்து, கோபியை மட்டும் முன்னால் கூட்டி வந்து காட்டுகின்றது. அதனாலன்றோ மாந்தர்கள் துஷ்கிருத்யம் செய்து தீயோ ராகின்றனர். சாந்தன் பேச்சைக் கேட்டால் ஒருவித ஸங்கடமும் உண் டாகாதே.

***

"புருடராய் ஜனனமதெடுத்தபேர் மெய்ஞ்ஞானபோதத்தை யறிவ தொன்று" அந்த ஞானபோதகமாவது தனக்கும் உலகுக்கும் நன்மை செய்து கொள்ளுதலே. உலகத்திற் பிறந்த நாம் மனதை நல்ல நிலைமைக்குக் கொண்டு வாராமல் சும்மாவிருப்பது தீது. மற்றொரு உலகத்தைத் தேடிச்செல்லுமுன் இவ்வுலகத்தில் நாமிருக்கும்வரை நல்லவர் என்ற பெயர்பெற்றுப் பிறர்க்கு இயன்ற உதவிசெய்து சுகியாயிருக்கவேண்டும். அப்படி செய்யாத அதமர்கட்கு மறு உலகம் வழிவிடாது. நரகம் அவர்களை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கும்.

***

"இந்த அந்தமாய் மனமே யீடழிய வேண்டாங்காண்" என்றார் பெரி யோர். மனிதர்களை நாம் கவனித்தோமானால் அவர்களில் அநேகர் மனம் போன போக்கில் செல்லும் குணஸ்வபாவங்க ளுள்ளோராய் இருக்கக் காண லாம். சிலருக்குக் கோபம் அதிகம். சிலருக்குப் பொறாமை மிகுதி. சிலருக்கு ஏராளமான ஐச்வர்யமும் கீர்த்தியும் சேர்த்துவிட்டோமென்ற மமதையில் ஏழைகளை அலக்ஷியம் செய்யும் கர்வ சிந்தை ஜாஸ்தி. இன்னும் சிலருக்குக் கெட்ட நினைவே குடிகொண்டிருக்கும். மற்றும் சிலருக்கு காமக்குரோத ஜாரகோர கிருத்தியங்களே பிரதான காரியமா யிருக்கும். இத்தகையோரைத் திருத்துவது கஷ்டம். இவர்கள் இல்லாவிடினும் பிரபஞ்சம் நன்றாயிராது. சாந்தம் கோபம் என்ற பேதங்களில்லாவிட்டால் கவலை ஏது? வியவஹாரமேது? நித்யமும் எத்தனையோ ஜீவன்கள் பிறக்கின்றன. கோடிக்கணக்கான ஜீவன்கள் மாண்டுபோகின்றன. இவைகள் உலகத்திலிருக்கும்வரை க்ஷணநேரமாவது ஸாந்தமா யிருக்கிறதில்லை. ஏதாவது ஒரு கிருத்யம் செய்துகொண்டே யிருப்பார்கள். கடவுளின் திருவிளையாடலை எவ்விதமாய் வர்ணித்தாலும் தீராது. உலக சிருஷ்டியே விசித்திரமானது. ஒரு நிமிஷ நேரமாவது மனிதன் ஸாந்தனாயிரான். அவனுடைய மனதில் விஷயங்கள் ஸாகரம் ஸாகர மாய் உற்பத்தியாகும். ஆனால், அவைகளில் ஒன்றாவது நிலைத்திரா. இவர்கள் நூற்றுக்கு ஐந்துவீதமாவது நல்ல காரியங்களைச் செய்கிறார்களென்று கண்டிப் பாய்ச் சொல்ல இடமில்லை. மாறி மாறி ஸுகதுக்கங்களைக் கற்பித்துக் கொண்டே இருப்பார்கள். சேற்றினிடையே செந்தாமரை போன்றும் இவர்க ளில் எங்கோ ஒரு சிலர் உத்தமராய்த் தென்படுவர்.

***

"மிருக மனித பேதம்" நாயும் குதிரையும் சென்ற காரியங்களைப்பற்றி வியஸனப்படுவதும், இனி என்ன ஸம்பவிக்குமோ வென்று துக்கப்படுவதும் அவைகளுடைய இயற்கைக் குணங்களாகக் கொள்ளவில்லை. அப்போதப்போது சுகப்படுவதும் துக்கப்படுவதும் அவற்றின் தன்மையாக விருக்கிறது. மனி

---

கேட்பவர்கள் தன் பேச்சை அலக்ஷியம் செய்கிறார்கள் என்பதை யுண ராமல் மேலும் நீள வார்த்தையை வளர்ப்போனை என்னென்று கூற—?

தர்க்கோ அப்படியில்லை. அவர்கள் சென்ற காரியத்தைப்பற்றி வியஸனப்படுவதும், இனி நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி ஆலோசிப்பதும் வழக்கம். இதுதான் நரர்க்கும் மற்றப் பிராணிகட்குமுள்ள பேதம்.

***

**"கர்மம் செய்யுந்தோறும் ஜன்மம் உண்டு"** மிருகத்துக்கு ஸதா அதன் வைரிகளைக் கொல்வதே சிந்தையா யிருக்கும். புலி பதுங்குவதெல்லாம் பகையாளியைக் கொல்வதற்கே யன்றி வேறில்லை. திருடன் வீட்டை விட்டு எதற்காகப் புறப்படுகிறான்? தான் ஏராளமான திரவிய ராசியைப் பிறர் வீட்டிலிருந்து களவாடித் தனிகனாகலாமென்ற எண்ணம் அவனை எப்போதும் பாதித்துக் கொண்டிருப்பதால் வெளியே வருகிறான். சிங்கம் தன் வைரியாகிய யானையைக் கனவில் கண்டாலும் கோபத்துடன் எழுந்து கர்ஜிக்கிறது. ஒவ்வொருவரும் தங்கள் துவேஷிகளை ஹதம் செய்வதிலேயே கருத்துள்ளவர்கள். இவர்களின் ஸ்வபாவ குணங்களை எவ்விதம் மாற்றுவது? இயற்கையாய் அமைந்த குணமாதலால் இது கொஞ்சத்தில் போகாது. இவைகளையெல்லாம் நன்றாய்ப் பரிசீலனை செய்து மனோ விருத்தியை யடக்கி மனதை நாசப்படுத்தி ஏகாக்ர சித்தர்களாய், பரமாநந்தத்தை யனுபவித்த உத்தமசீலர்களின் பாதாரவிந்தத்தை ஒருதடவையாவது ஸ்மரித்து, அவர்கள் செய்துள்ள ஸத்கிரந்தங்களை ஸாங்கோ பாங்கமாய்ப் படித்து, தங்கள் ஜீவகாலத்தை வெகு ஸந்தோஷமாய்க் கழிக்கவேண்டியது மனிதர்களின் கடமையாகும். கர்மம் செய்யுந்தோறும் ஜன்மம் ஏற்படும். ஸத்கர்மத்தைச் செய்து பிரதிபலனை இச்சியாமல் உத்தம மார்க்கத்தை யனுசரிப்பது சிலாக்யமாகும். ஒவ்வொருவரும் உத்கிருஷ்ட ஸ்திதியை அடையப் பிரயத்தனிக்க வேண்டும்.

***

**"அஹிம்ஸை"** இதைப்போல் உத்தமமான தர்மம் எதுவுமில்லை. என்ன காரணத்தைக் கொண்டு பாம்பு மனுஷ்யனைக் கடிக்கிறது? அவனை ஆகாரமாக்கிக்கொள்ளலாமென்றா? இல்லை, இல்லை. மனுஷ்யனைத் தேள் கொட்டுவானேன்? அதனால் அதற்கு என்ன லாபம் ஸித்திக்கிறது? ஒன்றுமில்லை. இப்படியே ஹிம்ஸிக்கும் துஷ்ட பிராணிகளெல்லாம் வீண் காரியத்தையே செய்கின்றன. பகுத்தறிவுள்ள மனிதனும் ஹிம்ஸையை விளைத்தால் அவனுக்கும் விஷஜந்துக்களுக்கும் வித்யாஸமென்ன? உயர்ந்த படிப்பும் ஸத்ஸகவாஸமும் மனுஷ்யனுடைய நிலைமையை யுயர்த்துகின்றன. ஒவ்வொரு மனிதனிடமும் இரண்டு தன்மைகளிருக்கின்றன. ஒன்று மிருகத்தன்மை; ஒன்று தெய்வத் தன்மை. மிருகத் தன்மையால் பாபகாரியங்களையும், தெய்வத்தன்மையால் புண்ய காரியங்களையும் செய்கிறான். கொடுமை மிருகத்தின் தன்மை. **பொறுமை தெய்வத்தின் தன்மை. உபகாரம் செய்வது தெய்வத் தன்மை;** அபகாரம் புரிவது மிருகத் தன்மை. பிறருக்கு எவ்விதமான ஹிம்ஸையையும் செய்யாதிருந்தால் தெய்வத்தன்மை விருத்தியாகி மனம் சாந்தமான நிலைமையை யடையும். சாந்தநிலையில் மனதை யிருத்திப் பழக்கினால்தான் பகவானைக் காணலாம். சுபம்.

---

அமிர்தகுணபோதினி

விபவளு பங்குனிமீ 1உ

# லார்ட் எர்ஸ்கின் என்பவரது ஓயாத உழைப்பு.



நந்தமாய் வாழ்வதற்கு யாருக்குத்தான் அவா இல்லை? ஆனால் உழைக்காமல் வீடு கட்டிக் கொள்ள முயன்றால் அது முடியுமா? உட்கார்ந்து சுகமாய் உண்ணவே வெகு பேருக்குப் பிரியம். இது எத்தனை நாளைக்குக் கிடைக்கும்? உழைத்து உண்ணுஞ் சோறு உப்பில்லாச் சோறு அல்லவா? உத்தியோகமோ தொழிலோ நம்மைத் தேடிக் கொண்டு வருமா? நாமே அவைகள் இருக்கும் இடம் சென்று கைப்பற்ற முயலவேண்டும். ஓயா உழைப்பும், சலியா மனமும், ஒரே உறுதியைக்கொண்ட சிந்தையும் கடைசியில் தன் வெற்றியைப் பெற்றுவிடும். இதற்கு லார்ட் **எர்ஸ்கின்** என்பவரது ஜீவியம் போதிய உதாரணமாகும். அவர் ஸ்காத்லாந்து என்னும் தேசத்து ராஜதானி யாகிய எடின்பரோ என்னும் நகரில் 1750-ம்வூ ஜனவரிமீ 10-ம் தேதி பிறந்தவர். புத்தி, வீரம், தைரியம், துணிச்சல் முதலியவை களில் அவருக்குச் சரியானவர் இல்லவே யில்லை யென்று சொல்லும் படி யிருந்தார். அவர் இங்கிலாந்தின் ஆலோசனைச் சபையில் ஒரு நியாயாதிகாரியாகி ஆனரபில் என்னும் பட்டமும் பெற்றார். ஆனால் பால்யத்தில் அவரைப் பார்த்திருந்தவர்கள் அவர் இப்படிப்பட்ட உயர் பதவிக்கு வருவரென்று ஒருபோதும் நினைத்திருக்கமாட்டார் கள். ஏனென்றால், பாலியத்தில் அவரைச் செம்மையாய்ப் படிப்பிப் போருமில்லை. தானாய் ஒரு வேலையில் புகுந்து பயில்வதற்கும் பிதிரார்ஜிதம் அதிகமாய் இல்லாமல் போய்விட்டது. அவரது தந்தைக்கும் அவரைப் பண்டிதனாக்க ஒரு வழியும் அகப்படவில்லை. அப்பட்டணத்துப் பாடசாலைகளில் ஒன்றில் படிக்கவிட்டிருந்தார். அந்தப் பாடசாலை பிரதம சிக்ஷைக்கு ஏற்ற இடமாயிருந்தது. எர்ஸ்கின் அங்கு அதிக சுறுசுறுப்பும், சாமர்த்தியமும், ஞாபக

---

அட்டவணையுடன் பன்னிரு ஸஞ்சிகைகளையும் ஒன்றுசேர்த்துப் பயிண்டு செய்துகொண்டு மறுபடியும் வாசிக்கத் தொடங்குகையில் தான் "**அமிர்த குணபோதினி**"யின் உயர்வும் உன்னதமும் விளங்கும்.

சக்தியுமுள்ளவரென்று பேர் பெற்றார். கடைசியில் மேற்படிப்புக்கு வழியின்றிக் கப்பலில் ஒரு வேலைக்குப் போகும்படி நேர்ந்தது. கொஞ்ச நாள் அதே ஜீவனமாய் இருந்தார். முதல் முதல் ஒரு தடவை கப்பலேறித் தேசாந்தரம் போய் வந்தார்.

அந்தக் கப்பல் உத்தியோகமானது வெகு வருத்தமாயிருந்தது. ஆயினும் இவர் தமது விடாமுயற்சியால் அதில் பிடிமானமாய் அந்த வேலையில் மேன்மேலும் பழகிக்கொண்டே வந்தார். கப்பற் சண்டைக்கு வேண்டிய விஷயங்களும், கப்பல் நடத்தவேண்டிய வழிகளும் செம்மையாய்க் கற்றுக்கொண்டார். ஒழிவு வேளைகளில் தாம் அப்பியஸித்த் பாஷைகளையும் விடாமல் விருத்தி செய்துகொண்டு, ஸாதாரணமான விவஹார ஞானங்களிலும் பயிற்சி செய்துகொண்டே வந்தார். அவருக்கிருக்கிற பிடிமானத்தையும் திறமையையும் புத்தி முதலியவைகளையும் பார்த்து மெச்சி, அந்தக் கப்பலில் 2-வது அதிகாரியான உத்தியோகத்திற்குப் பதிலாளியாக அவரை ஏற்படுத்தினார்கள். அவருக்கு அந்த உத்தியோகமானது இன்னும் கொஞ்சநாளில் மேலான ஸ்திதிக்கு வரலாமென்று நினைக்கும்படியா யிருந்தது. ஆனால், அது பயன்படாமற் போய்விட்டது. அந்தக் கப்பலை அதன் சொந்தக்காரர்கள் விற்றுவிட்டதால், அவரும் தமது வேலையை இழந்து படாதபாடு பட நேர்ந்தது.

அப்பொழுது வேறு எந்த வேலையில் புகுவதற்கும் அவர்க்குச் சக்தியில்லை; வயதும் பதினெட்டாய்விட்டது. தகப்பனாரும் காலகதியை யடைந்தார். இனிமேல் வாழ்நாளைக் கழிப்பதற்கு அப்போது யாதொரு வழியும் தெரியவில்லை. அக்காலத்தில் அவருடைய கஷ்ட ஸ்திதியைக் கண்டாலும் கேட்டாலும் யாராவது இனி அவர் நல்ல தசைக்கு வருவாரென்று நினைப்பார்களா? அதிர்ஷ்ட விசேஷத்தால் அவர் பங்குக்குக் கிடைத்த சொற்ப பிதிரார்ஜித தனத்தை முன் பணம் கட்டிப் பட்டாளத்தில் ஒரு தாழ்ந்த உத்தியோகத்தில் பிரவேசித்தார். 1768-ம௵ அந்த வேலை அவர்க்குக் கிடைத்தது.

அவர் அந்தத் தாழ்ந்த வேலையிலேயே இருந்து கொண்டு நின்ற இடத்தில் நில்லாமல் ஊர்மேலூராய் அல்லாடிக் கொண்டும், ஒழிந்த வேளைகளில் அங்கங்கே தருமத்திற்காக வைத்திருக்கிற புஸ்தகசாலைகளில் பாஷைகளைக் கற்றுக் கொண்டும், மற்ற வேளைகளில் ஆட்டம் முதலியவைகளைப் பயிற்சி செய்து கொண்டும், தமக்கு வேண்டிய வியவஹார ஞானங்களை அப்பியஸித்துக் கொண்டும்

அழகில் அன்பு இருக்கிறது. அன்பில் அருள் இருக்கிறது. அருளில் அறம் இருக்கிறது. அறத்தில் மோக்ஷம் இருக்கிறது. ஒவ்வொரு படியாய் ஏறி உயர்ந்துகொண்டே செல்லுக.

இரண்டு வருஷ காலங் கழித்தார். 1770௵ ஒரு பெண்ணை விவாகம் செய்து கொண்டார். அந்தக் கன்னிகை நல்ல குலத்தில் பிறந்ததானாலும் விசேஷ அதிர்ஷ்டமுள்ளதன்று. அந்தக் கஷ்டதசையில் அவர் விவாகம் செய்துகொண்டது ஆலோசனையற்ற செய்கை தான். ஸம்ஸாரம் பலக்கவே அவருக்கு வேலையில் ஊக்கமும் மனதில் ஒருவித சுறுசுறுப்புமுண்டாயிற்று.

இப்படியிருக்கையில் சேனைகளோடுகூட தூரதேசம் போகும்படி நேரிட்டது. அப்படி நேரிட்டாலும், தம் ஸம்ஸாரத்தைக்கூட அழைத்துக்கொண்டு போகலாமென்று மாத்திரம் உத்தரவு கொடுத்தார்கள். அப்படியே இரண்டு வருஷகாலம் வெளியே சென்றிருந்தார். அப்போதும் ஒழிவு காலங்களில் நல்ல உயர்ந்த கிரந்தங்களையெல்லாம் படித்து அவைகளில் மேலான தேர்ச்சியடைந்து பண்டிதராயினார். பாலியத்தில் தாயார் போதித்திருந்த மதவிஷயங்களைப் பற்றியும் விசேஷமாய்ப் பரிசீலனஞ் செய்து அதிலும் வல்லவரானார்- அவர் இவ்வளவு விசேஷ பாண்டித்தியம பெற்றிருப்பதை அறிந்து சேனைகளுக்கு அந்தந்தச் சங்கதிகளை எடுத்து உபந்நியாஸஞ் செய்ய அவரை ஒரு குருவாக ஏற்படுத்தினார்கள். அப்போது அவருடைய உபந்நியாஸங்களைக் கேட்டவர்களுள் 'இவ்வளவு புத்தி சூக்ஷ்மமும் திறமையும் விவேகமுமுள்ளவர்கள் உயர்ந்த பதவிக்கு வர எந்நேரஞ் செல்லும்' என்று ஆநந்தப்படாதவர்கள் யார்?

மறுபடியும் 1772-ம்௵ இங்கிலாந்துக்கு வந்து லண்டன் நகரத்திலிருக்கையில் அதிக வல்லமையும் சாமர்த்தியமுமுள்ளவரென்று பேர் பெற்று 1773-ம்௵ அந்தச் சேனைகளுக்குத் தானே தலைவராயினார். ஆனாலும், அப்போதும் ஊரூராய்த் திரிகிற அலைச்சல் மாத்திரம் அவரை விடவில்லை. இந்த தலைவரான ஸ்தானத்துக்குமேல் வேறே உத்தியோகம் கிடையாதானதால், இன்னொரு புதிய உத்தியோகத்தைத் தேடத்தொடங்க வேண்டுமென்ற அபிமானம் கொஞ்சமுண்டாயிற்று. ஒருநாள் தற்செயலாய் ஒரு ராஜசபைக்குள் நுழைந்தார். அச்சமயத்தில் அங்கே ஒரு வியவஹாரம் நடக்க, அந்தச் சபையிலிருந்த நியாயாதிபதி இவரைப் பார்த்து பெரிய மனிதன் பிள்ளையென்று கவுரவமாய் வரவழைத்து, ஆசனங் கொடுத்து, யோக க்ஷேமங்களையெல்லாம் விசாரித்து, அத்தருணத்தில் அங்கே நடந்துகொண்டிருந்த வியவஹார ஸங்கதிகளையும் அவருக்கு எடுத்துச் சொன்னார். அவைகளை யெல்லாம் பார்த்தபோது எர்ஸ்கினுக்கு நாம் அவசியம் சட்டங்களைப் படித்து வக்கீலாய்ப் போகவேண்டும்; என்ன உபயோகமற்ற வேலை செய்து

---

ஒவ்வொரு தமிழ் மாதமும் பிறந்தவுடனே "அமிர்த குணபோதினி"யை ஆவலாய்த் தேடி எப்பொழுது வருமோ வென்று காத்திருந்து பெறும் மனத்தின் பரவசத்தை என்னென்று கூறுவோம்?

கொண்டிருக்கிறேம்" என்று ஒருவகைத் தீர்மான முண்டாகி ஒரு பாரிஸ்டர் ஆவதற்காக முயன்றூர்.

***

இப்போது இவர் மனம் திரும்பியிருக்கிறது மூன்ருவது வழி யல்லவா? சிறிது நாள் கப்பல் சேவகனுய் இருந்து கடலில் காலம் தள்ளினுர். அந்தப் பிழைப்பு கடைசிக்கு வரைக்கும் உதவாமல் நடுவில் மோசம் செய்துவிட்டது. அப்புறம் சிலநாள் தரைச் சேனை யிற் புகுந்து சொற்ப காலம் கழித்தார். அங்கு தான் உயர்ந்ததற்கு மேல் உயர இடமில்லை. அவ்வளவோடு நின்றுவிடுவதற்கு மனது கொஞ்சமும் ஒப்பவில்லை. ஆகவே, இப்போது புதிதாய் ஒரு வழி கண்டுபிடித்தார். அவர் நூதனமாய் ஆரம்பித்திருக்கிற வேலை எவ்வளவு கஷ்ட ஸாத்தியமான காரியம்! முதலில் எம். ஏ (M. A.) பட்டம் பெற்றுப் பின்பு சட்டங்களைப் படிக்க ஆரம்பிக்கவேண்டும். அந்தப் பட்டம் பெற என்னவாலுைம் மூன்று வருஷத்துக்குக் குறை யாது. தான் இருக்கிற வேலையில் இருந்துகொண்டே அவைகளை யெல்லாம் எப்படிப் படிக்கமாட்டுவார்? அந்த உத்தியோகத்தை விட்டுவிட்டாலோ உண்ணச் சோறில்லாமல் அலைவதுமல்லாமல், ஓரிடத்தில் போய்ப் படிப்பதற்குப் பணமில்லாமல் திண்டாடவேண்டி வருமே!

அவர் இந்த சங்கடங்கள் ஒன்றும் தன்னண்டை யணுகாமல் ஒரு வழி ஆலோசித்தார். உடனே ஆறு மாதத்திற்கு ரஜா கேட்டுக் கொண்டு சிறிதுநாள் படித்துக்கொண்டிருந்தார். அப்போது அவர் ஸங்கடம் இவ்வளவென்று சொல்லக்கூடாது. வரும்படி அடியோடு கிடையாது. ஸம்ஸாரமோ வரவர பிள்ளையுங் குட்டியுமாய்ப் பலத் துப் போயிற்று. அற்பமாய் ஸஹாயம் பண்ணவாவது சில நட்பா ளர்க ளிருப்பார்களோ வென்றுல் ஒருவருமில்லை. இந்த வருத்தங்களை யெல்லாம் எப்படியோ கடந்து **தன் கருத்தை நிறை வேற்றினுர்.** அவர் பெயர் பிரவித்தியாக வேண்டுவது ஒன்றுதான் குறையா யிருந்தது.

1778-ம்ஹு ஜூலைமீ ஒரு கோர்ட்டில் பிரவேசித்து ஒரு லாயர் குமாஸ்தாவாய் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அப்படி யிருக்கையில் நவம்பர் மாதத்தில் நல்ல காலம் பிறக்கக் காரணம் ஒன்று உண்டாயிற்று. ஒரு கப்பல் வர்த்தகன் ஏதோ ஒரு குற்றம் செய்ததாகக் கீழ்க் கோர்ட்டில் ருஜுவாகி, பலமான சிக்ஷை செய்யும் படி தீர்ப்பாயிற்று. அவன் மறுபடி மேல்கோர்ட்டில் அப்பீல்

---

பெண்கள் அடிக்கடி வரும் தங்களின் தாய் வீட்டினரை உபசரிப்பதில் கணவனுக்குத் தாங்கமுடியாத செலவுகளை வைத்து நடத்திவிட்டு, பிறகு கண வன் எதுமே அவர்களுக்குச் செய்யவில்லை என்கிறுர்கள்!

செய்யும்போது, எர்ஸ்கின் என்பவர் கப்பல் சங்கதிகளில் பழகினவரென்று அவரையும் ஒரு லாயராக ஏற்படுத்தினன். அந்த விவஹாரத்திற்கு இவர் தவிர இன்னும் மூன்று வக்கீல்களு மிருந்தார்கள். அம்மூவரும் கோர்ட்டில் பேசியபோது குற்றம் அவ்வளவு பெரியதல்லவென்று வாதித்து அவ்வாருக ஸ்தாபித்தார்கள். மறுநாள் எர்ஸ்கின் பேசவேண்டிய முறை வந்தது.

மறுதினம் அதாவது 1778-ம்ளு நவம்பர்மீ 24-ம் தேதி எர்ஸ்கின் சபை நடுவே வந்து, "நான் வாதிக்கப்போகிற விஷயத்தை தயை செய்து கேட்கவேண்டும்" என்று மெல்லிய குரலோடு சபையாரை வேண்டி விஷயத்தை எடுத்துச் சொல்லும்போது, அங்கிருந்தவர்களெல்லாம் இவர் யார் புதிதாயிருக்கிறுர் ; இவர் சொல்லுகிற விஷயமோ வெகு நாளாய்ப் பழகினவன் சொல்வது போல் எவ்வளவு சரியா யிருக்கிறதென்று அதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். எர்ஸ்கின், "இவரைச் சிறையிலா வைக்கிறது, ஒரு பெரிய அரண்மனையல்லவோ கட்டிக் கொடுக்கவேண்டும்" என்று இப்படிப் பலவிதமாய் வாதித்துக் கடைசியில் அவன் குற்றவாளியல்ல வென்று ஸ்தாபித்தார். விஷயங்களை எடுத்துச் சொல்லும்போது அதிக தைரியமாயும் கம்பீரமாயும் உபந்நியஸித்தார். அவருடைய வாதிக்கும் திறமையையும், உள்ளூற ஆஸ்தையோடு பேசுவதையும், அந்தந்த தருணங்களில் நுட்பமான விஷயங்களை அதற்குப் பொருத்தமாய் எடுத்துக் காட்டுவதையும் பார்த்துப் புகழாதவர் யார்?

அன்றையதினம் வாதித்துத் தன் கக்ஷிக்காரனுக்கு ஜெயமுண்டாக்கிக் கோர்ட்டை விட்டுக் கீழே இறங்கும்போது கோர்ட்டில் அநேகர், கையில் விவஹாரத்தையும் தனத்தையும் எடுத்துக்கொண்டு அவரைச் சூழ்ந்து வந்தார்கள். அப்போது ஒருவன் உமக்கு இவ்வளவு தைரியமாய்ப் பேச வல்லமை எப்படி உண்டாயிற்றென்று கேட்க, அதற்கு அவர் "நானே பேசினேன், என் வறுமையன்றோ பேசிற்று; நான் வீட்டுக்குப் போனல் பிள்ளைகள் நான்கு பக்கத்திலும்...அப்பா பழம் எங்கே, பலகாரம் எங்கே, பசிக்கிறதே என்று பிச்சிப் பிடுங்குகின்றனவே" என்ருர். காலையில் அவ்வளவு தரித்திரரா யிருந்தவர் அஸ்தமயத்திற்குள் எவ்வளவோ பேரும் பிரசித்தியும் ஆஸ்தியுமுள்ளவரானுர். இது ஓயா உழைப்பின் பலனன்றோ?

அன்று முதல் இம்மாதிரி எத்தனையோ விவஹாரங்களை எடுத்துக் கொண்டார். தான் பிடித்த சங்கதி ஒன்றும் தோற்றுப்போகா

---

நன்ருய்ப் புசித்துவிட்டபிறகு, எங்கு வந்துவிடுகிருர்களோ வென்று நடுங்கப்பட்டவர்கள் என்பதாகத் தாங்கள் உண்ட வீட்டைப்பற்றிப் பழிக்கிருர்கள். மனஸ்பூர்வமாய் செய்தும் வீணுகிறது.

மல் எல்லாவற்றிலும் ஜெயம் பெற்று வேண்டிய தனம் சம்பாதித்தார். அவருடைய குணசீலங்களையும் ஜனங்களிடத்திலிருக்கிற ஆதரவையும் புத்தி நுட்பத்தையும் பார்த்துக் கொண்டாடாதவர்களில்லை. ஒருநாள் அட்மிரல் லார்ட் கெப்பில் என்பவன் பிரான்ஸ் தேசத்தாரோடு நடந்த கப்பல் சண்டையில் ஏதோ ஒரு தப்பிதம் செய்ததாய் வியாஜ்ஜியம் வந்தது; அதையும் ஜெயித்துக் கொடுத்தார். அதற்காக அந்த அட்மிரல் அதிக நன்குமதிப்போடு பதினாயிரம் ரூபாய் வெகுமதி கொடுத்தான். இவர் பிடித்த கக்ஷி ஜெயிக்கவில்லை யென்கிற பேர் ஒருநாளும் கிடையாது.

சிறிது நாள் வரையில் அந்த வேலையிலேயே இருந்து, அதிக மான மேதையும் பிரதிபையுமுள்ளவரென்றும் வல்லமையுள்ளவரென்றும்சரியானவரென்றும் அநியாயத்தில் பிரவேசியாதவரென்றும் பேர் பெற்று நியாயாதிபதியானார். இதுவரையில் அவரோடுகூட வறுமையில் அடிபட்டுக் கொண்டு நீங்காத் துணைவியாய் இருந்து மகிழ்வித்த மாதரசியான அவரது மனையாட்டி அவருக்கு நல்ல தசை வரும் போது இருந்து சுகிக்கக் கொடுத்து வையாமல் இவ்வுலகத்தை விட்டுப் போயினாள். கஷ்டமெல்லாம் முதல் மனைவிக்கே போலும்! அவரும் அதற்காக அதிக சோகமடைந்து, மறுபடி மற்றொரு மணம் புரிந்து கொண்டு அவளோடுகூட மேன்மேலும் அபிவிர்த்தியாய் நெடுநாள் வாழ்வதானார்.

இந்த எர்ஸ்கின் என்பவரது ஜீவியம் நமக்கு எதைப் போதிக்கின்றது? ஓயா உழைப்பையும் சலியா முயற்சியையும் கொண்டு அபிவிர்த்திக்கான பாதையில் மேன்மேலும் புதிய ஊக்கத்துடனும் செல்லுமாறு தெரிவிக்கின்றது. தொட்டுக்கொண்ட முதல் வேலை தான் நமது ஜீவியத்தின் கடைசி வரைக்கு மென்பதில்லை. இடையில் எவ்வளவோ தவறிப் போகக்கூடும். அதற்கெல்லாம் தளர்ந்துவிடக் கூடாது. நமது காலத்தையும் வீண் செய்யவொண்ணாது. எந்நேரமும் உழைத்தவாறும் ஸதா சிந்தித்தவாறும் இருப்போர்க்கு என்றைக்காவது ஒருநாள் க்ஷேமகாலம் நிச்சயமே. நாம் ஏழ்மையுற்றிருக்கின்றோமென்றாவது, கையில் ஏதுமில்லையே என்றாவது கலங்க வேண்டாம். நமது உழைப்பே நமது செல்வம்; நமது ஓயாச் சிந்தனையே இனி நமக்குச் சேரப்போகும் பெரும் நிதிக்குவியலின் திறவுகோல். தவிக்கும் நெஞ்சமே! உன் தைரியத்தை விடாதே.

---

சிலர் தங்களின் வருத்தத்தைப்பற்றிச் சொல்லுகையில் உலகத்தையும் தங்களுடன் சேர்த்துக்கொண்டு, தங்கள் மரபைச் சேர்ந்த உலகம் அந்தக் கண்டன வியாசத்திற்கு மிக வருந்துகிறது என்று கூறுவர். ஆனால், அந்த மரபைச் சேர்ந்தவர்களுக்கோ வருந்தவேண்டியதான அந்த விஷயம் இன்னதென்றே தெரியாது. இது படித்தவர்கள் உண்டாக்குகிற கைச் 'சரக்கு!'

# அடுத்த புது வருடம்.

—நமது கையோப்ப நேயர்கட்கு.—



இந்த ஸஞ்சிகையுடன் இவ்வருஷம் முடிவை யடைகின்றது. புதிய சுக்கில வருஷம் இனி பிறக்கப் போகின்றது. நமது "அமிர்த குணபோதினி"க்கு மூன்று வயது பூர்ணமாகி, நான்காவது வயது பிறந்து விடுகிறது. சென்ற மூன்று வருஷங்களாக ஈசுவர கிருபையாலும், மகான்களாகிய பெரியோர்களின் ஆசீர்வாதத்தாலும், சந்தாதார்களின் அபிமானத்தினுலும் தான் இப்பத்திரிகை நடைபெற்று வந்துள்ளதென்பது நாம் சொல்லாமலே அமையும். நம்முடைய சிறு முயற்சியும் சிற்றறிவும் நண்பர்களாகிய கையொப்ப நேயர்களால் பெருமையை யடைந்தனவாதலின், அவர்களிடம் நாம் நன்றி பாராட்டுவதுடன், எக்காலத்திலும் இவ்வித பரோபகார சிந்தையையும், ஆஸ்திக புத்தியையும், மதாபிமானத்தையும் அவர்களுக்கு ஈசுவரன் நிலை நிறுத்தி தீர்க்காயுஸ்ஸை யருளி ஆசீர்வதிக்குமாறு கோருகிறோம். புது வருஷத்தில் பத்திரிகாபிமானத்தையும், பரஸ்பர நேசத்தையும் நமது அன்பர்கள் பலப்படுத்திக் கொள்ளும்படி வேண்டுகிறோம்.

சென்ற மூன்று வருடங்களாக "அமிர்த குணபோதினி"யை மனஸ் பூர்வமான பிரயாசையுடனும் விசேஷித்த ஆராய்ச்சியுடனும் நடத்தி வந்திருக்கின்றோம். பத்திரிகா நிர்வாகத்தில் 25-வருடங்களாக நாம் பெற்றுள்ள அநுபவத்தை "அமிர்த குணபோதினி"க்கு உபயோகித்து எத்துணைச் சிறப்பும் உன்னதமுமாய்ப் பரிமளிக்க வேண்டுமோ அவ்வளவுக்கும் முயன்றிருக்கின்றோம். ஒவ்வொரு பகுதியும் ஒவ்வொரு தனித்த சுவையுடனும் ஒளிர்கின்றது. **ஆநந்த தரிசனம்** ஒருவித சுவை. பத்திரிகையின் தலையங்கம் மற்றொருவித சுவை. **"விகடப் பிரதாபன்"** வேறொருவித அபூர்வமான அநுபவ ருசிகரம். **பெரியாரின் மொழிகள்** அதுவும் அரிய கற்கண்டுத் துண்டுகள். இவ்விதமே பத்திரிகை முற்றிலும் பலவகைத்தான சுவை நயங்கள் ததும்பி வாசகர்களின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, அறிவுக்கு மனோகரமான நல்விருந்தாகின்றன. இவ்வித உயர்வினை **"அமிர்த குணபோதினி"** ஒன்றிலே தான் காணலாமென்பது அதை வாசித்த அன்பர்களின் அபிப்பிராயம். இவ்வித சிலாக்கியத்தினைக் கொண்டுள்ள **"அமிர்த குணபோதினி"**யை அடுத்த புதிய **நான்காவது** வருடத்திலும் அபிமானித்து, புதுவருட சந்தாவான ரூபாய் ஒன்றையும் மணியாடர் மூலம் அனுப்பி ஆதரிக்குமாறு பிரார்த்திக்கின்றோம். **மார்ச்சு மாதம் 30-ந் தேதிக்குள் மணியாடர் மூலம் சந்**

---

சிறுமீன் எல்லாம் பெரிய மீனுக்கு இரை. இவ்விதமே, சிறிய தேசபக்தர்களின் உண்மை உழைப்பெல்லாம் பெரியதேச பக்தர்களுக்கு இரையாய்ப் போய், இந்தப் "பெரிய" பக்தர்களின் பெயரே எங்கும் பிரமாதப்படுகிறது!

தாவை அனுப்பி விடுவோருக்கு மட்டும் நமது 96-பக்கங்களுள்ள "அமிர்த குணபோதினி சுக்கிலவருஷ பஞ்சாங்க"மும் இனமாகக் கிடைக்கும். மார்ச்சு-30-ம் தேதிக்குப் பிறகு அனுப்புவோருக்கு இந்தப் பரிசு இல்லையாதலின் அந்தத் தேதிக்குள் மணியாடர் செய்ய வேண்டுகிறோம். வி. பி. யை விட மணியாடர் செய்வதுதான் லாபகரமானது.

**மணியாடர் செய்ய சௌகரியப்படாத அன்பர்களுக்கெல்லாம் சித்திரை மாதத்திய பத்திரிகையை வி. பி. யில் அனுப்பி வைப்போம். இந்த வி. பி. கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் அனுப்பப்படுமாதலின், சித்திரை மாதக் கடைசிக்குள் எல்லோருக்கும் வி. பி. கள் கிடைத்து விடும். ஆகவே, மணியாடர் மூலம் அனுப்ப சௌகரியப்படாத நண்பர்கள் சித்திரை மாதம் முதல் தேதியில் சித்திரை மாத ஸஞ்சிகை வரவில்லையே யென்று எண்ணக்கூடாது. வி. பி. யின் மூலமாக அச்சஞ்சிகை தங்கட்குக் கிடைக்கு மென்று உணர்ந்துகொண்டு சித்திரை மாத முடிவிற்குள் தங்களுக்குக் கிடைக்கிற வி. பி. யை அது வந்ததும் அன்புடன் ஒப்புக்கொண்டு ஆதரிக்குமாறு கோருகிறோம். மணியாடர் மூலம் சந்தாவை அனுப்பி விடுவோருக்கு சித்திரை மாதம் முதல் தேதியிலேயே சித்திரை மாத ஸஞ்சிகை வழக்கம் போல் தொடர்ந்து அனுப்பி விடப்படும். இந்த விவரங்களை நமது அன்பர்கள் கவனித்து வாசிக்கக் கோருகிறோம்.**

நமது "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகை இதுவரை நடைபெற்றதை விடப் புது வருடத்தில் இன்னும் சிலாக்கியமாய் விளங்கும். சித்திரப் படப் பகுதிகள் விசேஷமாகச் சேர்க்கப்படும். மேன்மேலும் சுவைநயம் அதிகரித்து அமிர்தமயமாய் விளங்கும் வண்ணமாக வேண்டிய பிரயாசை எடுத்துக் கொள்வோம். ஆதலின், நம்மிடம் சென்ற மூன்றுவருஷ காலமாக அன்பு பாராட்டிப் பத்திரிகையை யபிமானித்து வரும் நண்பர்களும் மற்றக் கனவான்களும் "அமிர்த குணபோதினி"யை நான்காவது வருடத்திலும் ஆதரித்து, என்றைக்கும் மாறாத விசுவாசத்தைக் கொள்ளக் கோருகிறோம்.

உலகத்தில் வேதவதி என்னும் பதிவிரதையாகிய ஸ்திரீ ரத்நம் நடந்து போகிறாள். அவளைக் கண்டு சில வம்பர்கள் குறைகூறித் தூஷிப்பர். வேதவதி லக்ஷ்யம் செய்வளோ? சிலர் அம்மாதைப் பர்த்தாவின் இல்லத்திற்குச் செல்லவொட்டாமல் ஏதேனும் இடையூறுகளை விளைத்துத் தடுப்பர். பதிவிரதை பின்வாங்குவளோ? ஒருபோதும் பயப்படாள். யாரையும் லக்ஷியம் செய்யாமல் கண்ணெடுத்துப் பாராமல் தன் பிராணபதியையே நாடிச் செல்வாள். அதுபோல் நமது நண்பர்களாகிய சந்தா நேயர்களின் அபிமானமானது பதிவிரதையாகிய வேதவதிக்கு ஸமானமாய் "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையையே நாடுகிறது. இவ்வபிமானத்தைக் கெடுக்க சிலர் ஏற்பட்டாலும் அவர்களின் கருத்து நிறைவேறுமோ? அதற்குத் தான் நமது நேயர்கள் இடம் கொடுப்பார்களோ? இடம் கொடார் என்பதே எமது துணிபு. பகவானுடைய

---

உதவிசெய்ய மனமுள்ள நண்பர்கள் கேட்காமலே பணமும் சகாயங்களும் அனுப்புகிறார்கள். அத்தகைய நல்லோருக்குத்தான் கடிதம் எழுத நமக்குப் பொழுது கிடைப்பதில்லை. ஆனால், மறந்தது எந்நாளுமில்லை.

பிரீதி பக்தனிடமே ஊன்றுவதுபோல், நமது கையொப்ப நேயர்களின் அபிமானம் "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையின் மீதே நாடியிருக்க வேண்டுமென்பது நம்முடைய கோரிக்கை.

மழைத்துளிகள் விழுந்து பெரிய தடாகத்தை நிரப்பி ஜனங்கட்கும் பயிர்களுக்கும் பிரயோஜனத்தை விளைப்பது போல, சந்தா நேயர்கள் ஒவ்வொருவரும் செலுத்தும் சொற்ப தொகையாகிய ஒரு ரூபாயானது "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையை உலகமெங்கும் உலாவி வரும்படி செய்கிறது. இனி புது வருஷத்தில் ஸர்வ ஜனங்கட்கும் ஸந்தோஷத்தைத் தாக்கூடிய விஷயங்களே நமது "அமிர்த குணபோதினி"யில் நிறைய வேண்டுமென்றும், இப்போதுள்ள அபிமானிகள் யாவரும் இப்பத்திரிகையை இனிவரும் புது வருஷத்திலும் ஆதரிப்பதில் சிரத்தை கொள்ள வேண்டுமென்றும், தங்களுடைய சந்தாக்களைச் செலுத்துவதோடு புதிய சந்தாக்களையும் சேர்த்துப் பரோபகாரம் செய்து "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகாபிமானிகளாய் ஜ்வலிக்க வேண்டுமென்றும் பரமகருணை நிதியாகிய பகவானைப் பிரார்த்திக்கின்றோம்.

பத்திராசிரியர்.

## வாழ எண்ணுதல்.

வாழ எண்ணுவோன் எந்நாளும் ஒரு தொழிலில் நிற்பான். உழைப்பில் நிற்பான். உண்மையில் நிற்பான். உறுதியில் நிற்பான். தன் மானத்தில் நிற்பான். நற்பெயரில் நிற்பான். நலத்தில் நிற்பான். நாலுகாசு சேர்ப்பதில் நிற்பான். பிறர் பேச்சுக்குப் போகான். ஏச்சும் கேளான். தீயது செய்யான். அவதூறுக்கு அஞ்சுவான். பிறர் ஏசப்பொறான். உயர்நலஞ் சார்வான். உன்னதத்தில் திருஷ்டி பாயும். தெய்வத்தை நம்புவான். நன்மனத்தினரை நாடுவான். நல்லோர் கூட்டத்தில் இருப்பான். நன்றாக வாழ்ந்து நற்புதல்வர்களுடன் நற்கதி காண்பான். நீ வாழ எண்ணினால் இப்படி நில். எதற்கு உன் நன்மனதே முதற் காரணம்.

இஸ்லாமியருக்குக் கோபம் வந்தால் தங்கள் தேக பலத்தைக் காட்டி உடனே சிக்ஷிப்பர். பிராமணர்களுக்குக் கோபம்வந்தால் தங்கள் புத்தியின் பலத்தைக்காட்டிப் பிறகு அதற்கான காலம் பார்த்துச் சிக்ஷிப்பர்.

பயன் இல்லாத ஒரு வெறும்பேச்சில் ஒரு சண்டை தோன்றிக் கொண்டு அதில் பழய சங்கதிகளெல்லாம் புகுந்து கலகமாகி அன்றையப்பொழுதும் விஷமாய் விடுகிறது.

எவ்வளவோ கீர்த்திபெற்றவர்கள் சாந்தமாக ஒரு மூலையில்கிடக்க, புதிய கீர்த்திக்காரர்கள்தான் முன்னே வந்து வெகு ஆரவாரம் செய்கின்றனர்.






இன்று கூடிய நமது கடைக்குப் புஸ்தக வியாபாரம் பித்தலாட்டம் ஐயர் வந்திருந்தார். அவர் புஸ்தக வியாபாரத்தில் நல்ல லாபம் இருக்கிறதென்றும், முப்பது ரூபாய் உத்தியோகத்துக்கு மாதம் முழுதும் சட்டை தலைப்பாகையுடன் போய் உழைப்பதை விட, அந்த முப்பது ரூபாயை தினத்துக்குப் பதினைந்து ரூபாய் வீதம் இரண்டு தினத்தில் அனுப்பும் புஸ்தக வி. பி. களின் மூலம் தேடி விடலாமென்றும், ஒரே நாளில் கூட இத்தொகை வந்து விடுமென்றும் கூறினர். "முப்பது ரூபாய்க்கு வி. பி. அனுப்பினல் அதற்கு வருகிற கமிஷன் தானே புஸ்தக வியாபாரிக்கு லாபம்" என்று தாண்டவக்கோன் கேட்டார். அதற்குப் பித்தலாட்டம் ஐயர் "அந்த முப்பதும் நமக்கே தான் சொந்தம். புஸ்தகம் விற்றுத் தரும்படி நம்மிடம் கொடுத்த ஆசிரியர்களுக்கு அநேகமாக வாயில் மண்ணைப் போட்டு விடுவதே வழக்கம்; அல்லது பல நாளைக்கு இழுத்தலைத்துப் பிறகு ஏதாவது கொஞ்சம் அவர்கள் முகத்தில் பூசியனுப்புவதுண்டு; நமது சொந்தப் பிரசுரங்கள் வகையிலும் வேறே லாபம் இருக்கிறதல்லவா என்ருர்.

***

புஸ்தக வியாபாரத்தை விட, மருந்து வியாபாரத்தில் 'கொழுத்த காசு' என்றும், புஸ்தக வியாபாரம் 400, 500-ரூபாய்கள் செலவிட்டுப் பிறகு புஸ்தகம் தயாரித்தாக வேண்டியிருக்கிறதென்றும், மருந்து வியாபாரம் ஒரு இருபது ரூபாய்க்குள் முடிந்துவிடக் கூடியதென்றும், அந்த இருபது ரூபாய் மருந்துக்கு இருநூறு ரூபாய் விலை வைத்து விற்று விடலாமென்றும், அதனல் தான் மருந்து வியாபாரிகள் அதிகமான விளம்பரங்கள் செய்ய அவர்களுக்குச் செலவுக்குக் கட்டி வருகிறதென்றும் கஜகர்ணம் செட்டியார் பேசினர்.

***

"எல்லாமே லாபமாகிப் பெட்டியில் பணம் கல கலவென்று குவிந்து விடுவதில்லை. புஸ்தகம் எழுதும் நூலாசிரியர்கள் நாளைக்கும் பரம ஏழைகளாய் நிற்கிருர்கள். அவர்களுக்கு எவ்வளவு கொடுத்தாலும் ஆதரித்தாலும் அது புண்ணியமாகும். அது கடவுள் வரைக்கும் எட்டும். விளம்பரம் செய்ய சக்தியின்றி எவ்வளவோ ஆசிரியர்கள் கஷ்டப்படுகிருர்கள். புஸ்தக வியாபாரத்திலும், திடீரென்று கரையான் பிடித்து விடுகிறதும், ராமாயணம் போன்ற பூச்சிகள் துளைத்து விடுவதுமான கண்ராவிகள் வேறே! புஸ்தக ரூபமாய் விற்ருல் நூறு ரூபாயுண்டு. விற்காவிட்டாலோ பலசரக்குக் கடையில் வீசை மூன்றணு வீதம் திராசில் நிறுத்தித் தள்ள வேண்டியதே. இதிலும் இரவல், இனும் என்ற

---

எஜமானனுக்கு லாபம் உண்டாக்கத்தான் உழைப்பதாய் எண்ணவேண்டாம். தனக்கே அதில் ஒரு அபிவிர்த்தி யிருக்கிறதென்று உழைத்துப் பாடுபடு.

தொல்லைகள் வேறேயுண்டு. இப்படியே மருந்து வியாபாரத்திலும், அதைச் செய்வதற்குள் மூளை கலங்கிப் போகிறது. இலவசத்தில் பலர் வந்து பெறுவதும் அநேகம். சீக்கிரம் விற்காவிடில் லேகிய வகைகள் பாசிப் போவதும் உண்டு. தபாலில் அனுப்புகையில் லேகியம், தைலம் இவைகள் சேதப்பட்டு விட்டால் தபால் அதிகாரிகள் அவற்றை அனுப்பியவருக்குத் திருப்பித் தருவதில்லை. அது எந்த ஊரில் சேதப்பட்டதோ அங்கு போய் அதைப் பெறும்படி எழுதுகிறார்கள். அனுப்பியவர் சென்னையிலிருக்கிறார். சேதப்பட்ட இடம் தூத்துக்குடி! அவ்வளவு தூரம் போய் அதை வாங்க முடிகிறதா? அந்த மருந்துக்கு எழுதிய தூத்துக்குடியானாகிய வேங்கடசாமியும் ஓ! மருந்து பார்ஸல் உடைந்து விட்டது, வேண்டாம் என்று விடுகிறான். பிறகு அது தபாலாபீஸாரால் எறிந்து விடும்படியாகிறது. அது அனுப்பியவருக்குத் திரும்பி வருவதில்லை. இப்படியாக எந்த வியாபாரத்திலும் நஷ்டங்கள் இல்லாமலில்லை. இந்தக் நஷ்டங்களையும் பாடுகளையும் சேர்த்துப் பார்த்தால் லாபம் கொஞ்சமே இருக்கும். ஆனால் அதிர்ஷ்ட ரேகையுள்ள சிலருக்கு நல்ல வரும்படி என்பதிலும் தடையில்லை. எல்லாருக்குமே இந்த லாட்டரிச் சீட்டு விழுகிறதா" என்று அல்லாபிச்சை பேசினார்.

***

"காய் கறிகளின் வியாபாரத்தில் நல்ல லாபம் இருக்கிறதென்றும், ஒரு சிறு வாழையிலை காலணா அரையணா, ஒரு அணாவுக்கு நாலு கத்தரிக்காய், ஒரு வாழைக்காய் அரையணா, அவரைக்காய் ஆறுக்குக் காலணா! கோழி முட்டை யளவுள்ள மாங்காய் காலணா! என்ன விலை உயர்த்தினாலும் வாங்காமல் திரும்ப முடிகிறதில்லை. இதில் விசேஷித்த வருமானம் இருக்கிறது" என்று திண்டுராயர் திக்கித் திக்கிக் கூறினார். உடனே நொண்டித் தேவர் எழுந்தார். "இந்த வியாபாரத்துக்கு நாற்காலிப் படிப்பு பேனா உதவாது. அரிவாள், கயிறு, தலையில் தூக்கி வைத்துச் செல்லும் தட்டு, வெயிலில் காயும் தலை இவையெல்லாம் தேவை. காலையில் பத்து மணிக்குக் காய்கறி வியாபாரம் முடிந்ததும் வீடு சென்று பழயதைக் கரைத்துக் குடித்துவிட்டு தட்டைத் தூக்கிக்கொண்டு தோட்டங்களுக்குச் சென்று, காய் கறிகளை அறுத்தும் கழுவியும், தோட்டக்காரர்களிடம் மொத்த விலைக்குப் பேசி முடித்தும், மாலை வரையில் அங்கே உழைத்து அவற்றைத் தட்டில் வைத்துத் தலை மேல் நோவ அந்த பாரச் சுமையைத் தூக்கிக்கொண்டு சாயந்திர வேளையில் வீடு வந்து, அதற்கு அப்பால் சாதம் சமைத்து உண்டு விட்டு உறங்கி, மறுநாட் காலையில் தட்டைத் தூக்கிக்கொண்டு ஓடோடிக் கடைவீதி வந்து வியாபாரம் செய்ய வேணடிய உழைப்பை பி. ஏ, எம். ஏக்கள் படுமா? நாற்காலி பேனாக்காரர்கள் படுவார்களா? அந்த உழைப்புக்கு அவர்கள் சொன்ன விலை சரிதான். எதிலும் கஷ்டமில்லாமல் பிழைப்பு கிடையாது" என்று நொண்டித் தேவர் ஒவ்வொன்றையும் நோண்டி நோண்டி வெளியில் கொட்டினார்.

***

---

லாட்டரிச் சீட்டுக்குக் காலமுழுதும் ரூபாய்களைக் கொட்டிக்கொண்டு இருக்கும் பெரிய மனிதர்கள் சிலருண்டு. இவர்களுக்கு சீட்டு விழுவதேயில்லை!

"பலவித மூலிகைகள், மருந்துச் சரக்குகள் விற்கிற மருந்துக் கடையில் நல்ல லாபமென்றும், அதற்கு வைத்திய ஞானம் கொஞ்சம் வேண்டுமென்றும், நெல்லிக்காய் காலத்தில் அதை இடித்துக் காயை எடுத்துக் கொண்டு கொட்டையை எறிந்து விடுவதில், அந்தக் கொட்டைகளை மருந்துக் கடைக்காரன் நெல்லிவத்தல் என்று பலம் அரையணு வீதம் விற்கிறுனென்றும், 500-ரூபா சரக்குள்ள மருந்துக்கடை அந்த வியாபாரி கடையை எடுத்து விடுவதாஞல் 100-ரூபாய்க்கே விலே போகுமென்றும், இப்படியே பலசரக்கு மளிகை வியாபாரத்திலும், விலே இறங்கி விட்டகாலத்தில் நஷ்டப்பட வேண்டியிருக்கிறதும் தவிர, அதற்குத் திராசு பிடிக்கிற வித்தை, பொட்டணம் கட்டும் சுறுசுறுப்பு, வாய்சாலக்கு, வஸ்துக்களின் நோட்டம், நயமான விலேக்கு வாங்கிப்போட்டு வைக்கும் அநுபவம், நாற்றம்பிடித்த நெய்யை முருங்கையிலே போட்டுக் காய்ச்சி விற்று விடுகிற சாமர்த்தியம், நிறுத்தாமலே கையளவில் பார்த்துக் கொடுக்கிற பழக்கம், ஜகஜால சித்து வித்தைகள் இவைகள் எல்லாம் வேண்டியிருக்கிறதென்றும், இவற்றையெல்லாம் கூலிச் சம்பளத்திற்குக் கடையில் இருந்து கற்றுத் தெளிய வேண்டிய சங்கதியென்றும், **வியாபாரப் படிப்பானது அநுபவப் படிப்பு** என்றும், குமாஸ்தா நாற்காலிப் படிப்பு தான் பள்ளிக்கூடத்தில் கிடைக்கக் கூடியதென்றும், எதிலும் உழைப்பு, அதற்கு மேல் அதிர்ஷ்டம் என்கிற இந்த இரண்டும் வேண்டியிருக்கிறது" என்றும் தாண்டவக் கோன் நவின்ருர். இத்துடன் நமது கடையும் பூர்த்தி பெறுகின்றது.

பொன்வண்டு செட்டியார்.

## வலிய வலிய வருவோர்.

நமது வர்த்தகத்திற்கே ஆபத்தான மனிதர்களென்று சிலரிடத்திலிருந்து விலகி, நாம் ஜாக்கிரதையும் எச்சரிக்கையுமாய் இருக்கப்போக, அவர்களோ வெகு வெகு உறவும் சிரிப்புமாய் வலிய வலிய நம் கடைக்கு அடிக்கடி வந்து குலாவுகிருர்கள். நாம் சரிவரப் பேசாவிடினும் கூட அடிக்கடி வந்துபோவது அவர்களின் ஜெகஜால வித்தையையும், தந்திரத்தையும் காட்டுகிறது. அவர்களால் ஒரு காரியம் ஆகவேண்டியிருந்தாலுங்கூட, அதை நாமே செய்துகொண்டு தூரத்தில் எவ்வளவுக்குவிலகி நிற்கிரேமோ- அவ்வளவுக்கும் நமக்கு க்ஷேமம். போதும் அவர்களால் முன்பு பட்டபாடு!

தங்களே விழுங்கிவிடக் கூடியவர்களென்று சில புத்திசாலிகள் சில அறிவாளிகளேப் பற்றி வெகு கவலேயோடும் அருவருப்பாய் நினைத்து அவர்கள் தங்களிடம் என்றைக்கும் கிட்டிவாராதபடி வெகு தந்திரங்கள் செய்கிருர்கள்.




# லாலா தேவி.



(536-ம் பக்கத் தொடர்ச்சி.)



ரஜபுத்திரரோ அஞ்சாத நெஞ்சும், குன்றாத ஆண்மையும் உள்ளவர். சண்டையில் பின்னிட்டறியாத வீரமுடையவர். அவர்கள் ஆவேசம் கொண்டு எதிர்த்தவரை யெல்லாம் கொன்று முன்னுக்குச் செல்வாராயினர். "அர, அர மகாதேவா" என்னும் சத்தம் எங்கும் கேட்டது. இவ்வாறு அவர்கள் ஆமத்ஷா பட்டத்தானையண்டை சேர்ந்து, யானைமீது சிலர் பாணங்களைச் சொரிந்தனர். சிலர் ஈட்டிகளை எரிந்தனர்.

இராம்சிங்கு சமயம் பார்த்து, யானைக்கீழ் பாய்ந்து, கையிலுள்ள கட்டாரியால் அதின் வயிற்றிற் குத்தினன். உடனே யானை விழ, யானைமீது வீற்றிருந்த ஆமத்ஷாவும் விழுந்தான். இராம்சிங்கு அவன்மேற் புலிபோலும் பாய்ந்தான். ஆமத்ஷாவோ அவனுக்குத் தப்பி இடையிலிருந்த கத்தியை எடுத்தான். ஆமத்ஷா கத்திச் சண்டையில் சமர்த்தன். எத்தகையோரையும் கொல்லவல்லான். அவன் தன் கத்தியைக் கரகரவென்று சுழற்றுகையில் அவனையணுகி அவனைக் கொல்ல இராம்சிங்கால் ஆகவில்லை. அவன் கையிற் பிடித்தது கட்டாரியாகும்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சத்துருக்கள் ஆயிரக் கணக்காய்க்கூடி, ரஜபுத்திரரை வதைத்தனர். ரஜபுத்திரர் அவர்களை முறித்து அப்பால் போவதற்கில்லை. அவர்கள் எவ்வளவுதான் ஆண்மையுடையவரேனும், புற்றீசல் போலப் புறப்படும் சத்துருக்களைத் தொலைப்பதெப்படி? அவர்கள் கையிலிருந்த கத்திகளெல்லாம் இப்போது ஒடிந்தும் மழுங்கியும் போயின. தோள்கள் தளர்ந்தன. கைகள் சோர்ந்தன. ஆயினும் அவர்கள் சண்டையை நிறுத்தியவரல்லர். அநேகர் சமயம் பார்த்து, சத்துருக்களின் படைக்குள் நுழைந்து எதிர்ப்பட்டவரெல்லோரையும் கொன்றூர்கள்.

துருக்கரோ ரஜபுத்திரருடைய வீரத்தைக்கண்டு வியந்தனர், வியந்து வெட்கமுற்றனர். இவர்களைச்

---

தூர இருக்குங்கால் பிரவித்தி பெற்றவரைப்பற்றி மேன்மையாக நினைக்கிறது. அவரை நெருங்கிப் பார்க்கையிலோ அலக்ஷியமாய்ப் போகிறது.

செயிக்க எவ்வளவு முயன்றும் முடியவில்லையே! பருவதசிங்கின் கொடியும் குடையும் இன்னும் குலையவில்லையே! நமது படைகள் இதுவரையில் ஏராளமாய் மடிந்தனரே என்று கலங்கினர்.

ஆயினும், ரஜபுத்திரர் எவ்வளவு சூராயினும் மேன்மேலும் வந்து கொண்டிருக்கும் சத்துருக்களை வெல்வது கூடுமோ? பருவதசிங்கு தன் கட்டாரியால் பசுக்கூட்டத்துப் புலி போல் எதிரிகளில் பலரைக் கொன்று வந்தானுயினும் கடைசியில் எதிரிகளில் ஒருவன் எய்த அம்பால் கீழ் வீழ்ந்தான். கீழ் வீழ்ந்து சற்று நேரத்தில் பிணமானுன். உடனே இராம்சிங்கு ஓடி அவரைத் தழுவி கண்களில் நீர் ததும்ப, "கனந்தங்கிய தந்தையே! இந்நேரம் சண்டை செய்த அலுப்பால் இப்போது இளைப்பாறுகின்றீரோ? என்னைத் தனியேயிருத்தித் தேடுதற்கரிய வீரசொர்க்கம் சேர்ந்தீரோ?" என்று சொல்லிக் கண்ணீரைத் துடைத்துத் திரும்பவும் "நல்லது, நானும் விரைவில் தங்களிடம் வருவேன், வரும்போது சத்துருக்களில் நானூறு பெயரைக் கொண்டு வருவேன்" என்றுன்.

அப்பால் அவன் தந்தையார் குடை நிழலில் நின்று தன் படைக்குத் தைரியம் கூறி சத்துருக்களை எதிர்க்கலானுன். அநேகர் அவன் கையால் மாண்டார்கள். அநேகர் காயமுற்றுர்கள். கத்தியும் ஒடிந்தது. உடனே அருகிலிருந்த ஓர் துருக்க வீரன்மீது பாய்ந்து அவன் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக்கொண்டு அக்கத்தியால் மூவரைக் கொன்று இருவரைக் காயப்படுத்தினுன். ஆயினும் சற்று நேரத்திற்கெல்லாம் வேறொருதுருக்கன் பின்னுல்பாய்ந்து இராம் சிங்கைச் சாய்த்தான். அவன் தலையிற் கவிழ்ந்த குடையும் கொடியும் விழுந்தன. அஞ்சா நெஞ்சுடைய அவன் படை வீரரும் ஒழிந்தார்கள். சண்டையும் முடிவுற்றது. "அர அர, மகாதேவா!" என்னும் சத்தம் போய், "தீன், தீன், தீன்" என்னும் முழக்கமாயிற்று. மூவாயிரம் ரஜபுத்திரர் மடிந்தனர். ஆயினும் துருக்கப் படையில் இம்மூவாயிரவரால் எண்ணுயிரவர் இறந்தனர்.

ஆமத்ஷா எதிரிகளை வென்றுன். ஆகோர் கோட்டையைக் கைப்பற்றினுன். இனி இஷ்டம்போல லாலாவைக் கூட்டிக்கொண்டு போய் மணஞ்செய்து மகிழ மனோராச்சியம் செய்தான்.

ஆனுல், அவன் கோட்டைக்குள் நுழைந்தபோது கண்ட காட்சியோ கண்ணுற் காண்பதல்ல. எங்கும் பிணங்களன்றி உயிரோடிருப்பவர் ஒருவருமில்லை. கோட்டையின் உள்ளும் புறமும் பிணநாற்றமன்றிப் பிறிதில்லை.

## III

ஆமத்ஷாவின் மனம் திடுக்கிட்டது. திரண்ட சேனையைக் கூட்டி விசேஷ பொருள் செலவிட்டு நெடுநாள் போர்புரிந்து கணக்கற்ற போர் வீரரைத் தோற்றும், முடிவில் ஜெயம் பெற்றும், தான் எண்ணிய எண்ணம் ஈடேறவில்லையே! தான் மணம் செய்து மகிழலாமென்றிருந்த மங்கையர்க்கரசியும், மானினேர் விழியாளுமாகிய லாலா தீயில் விழுந்து மடிந்தனளே! அவன் விழுந்தான், புரண்டான், அழுதான், அலறினுன்.

விலகுகிறவன் போதும் பட்டபாடு என்று நினைத்து விலகுகிறுன். அவனை ஓட்டி நிற்க விரும்புகிறவன் தன் லாபம் சௌகரியம் விட்டுப்போகிறதே யென்று கூடவே தொடர்கிறுன்.

இவன் இவ்வாறு துக்கித்துக் கொண்டிருக்கையில் லாலா உயிருடன் இருப்பதாய்ச் செய்தியறிய, அவனுக்குப் போன உயிர் மீண்டும் வந்தது போலாயிற்று. அவன் எழுந்தோடி அவள் இருக்குமிடத்தை ஆவலோடு விசாரித்தான். அவளைக் கூட்டிவருவார்க்குக் கோடிப் பொன் தருவதாய்க் கூறினன். தன் காதலை யறிந்திருந்தும், அவளைத் தன்னிடம் அனுப்பாது வைத்திருக்கும் அம் மாபாவி யாவன் என்று அவனைத் திட்டவும் ஆரம்பித்தான்.

சண்டை நடக்குமுன் பருவத சிங்கு தன் மகள் லாலாவை அண்டை நாட்டுச் சிற்றரசனிடம் ஒப்புவித்திருந்தான். காமப்பேய் பிடித்த ஆமத்ஷா, அச்சிற்றரசனுக்கு ஆள் போக்கி லாலாவை உடனே அனுப்ப வேண்டுமென்றும், அனுப்பாவிடில் பருவதசிங்கு பட்டபாடு படுவானென்றும் செய்தி அனுப்பினன். அச்சிற்றரசனே லாலாவின் நெருங்கிய உறவினன். உயர் குடியிற் பிறந்தவன். மானமே பெரிதென மதிப்பவன். அவன் ஆமத்ஷாவின் ஆளைப்பார்த்து, கண் சிவக்கப் புருவம் வளையக் கோபித்து, "லாலா எளிதிற் கிடைப்பாளென்று ஆமத்ஷா எண்ணவேண்டாம். நானும் என் படைவீரர் பத்தாயிரவரும் பட்டபின்பே அவன் இப்பாவையைப் பற்றக்கூடும் என்றுநான் சொன்னதாகச் சொல்" என்றான். இவற்றையெல்லாம் அந்தப்புரத்துப் பல கணிவழியாய்ப் பார்த்துக்கொண்டிருந்த லாலா அச்சிற்றரசனை நோக்கி "என் அன்புள்ள அண்ணுவே" என்று பின்வருமாறு கூறலானுள்.

(அடுத்த ஸஞ்சிகையில் முடிவு.)

ப. சி. கோவிந்தசாமி ராஜா.

> உனது எனது
>
> என்கிற பிரிவினைப் புத்தியுள்ள இடத்திலே உள்ளன்பு வேர் கொள்ளாது. வித்தியாஸ சிந்தனையே மிதமிஞ்சிப் பெருகும். மற்றவன் காரியத்தில் சிரத்தை பட வைக்காது. தன் காரியமே கண்ணுகச் செய்து மனத்தையும் கல்லாக்கிவிடும், இரக்கத்தைக் கொலைசெய்யும். வெகு கருமி வாழ்வில் கை நுழையும். இதில் தானும் சந்தோஷப்பட இயலா; பிறரையும் திருப்திபடுத்த முடியாது. எனது உனது என்பதுபெரியபேதபுத்தி.

---

பிரபல நூலாசிரியர்களிற் சிலர் அவ்வளவுக்கும் உள்ளுக்குக் கபடமணிகளாய் பெரிய மோசக்கார விவகாரிகளாய் அழுகி நிற்கிறுர்கள். அவர்களின் கீர்த்தியைப்போல் நாற்றமும் சகிக்க முடியாத அத்தனை பெரிதே.

—•—

ஒருவன் நிச்சயமும் நீடித்ததுமான ஒரு உத்தியோகம் கிடைக்கு முன்னம், எத்தனையோ பேர்களை உத்தமர்களென்று நம்பிப் பின் ஏமாறவேண்டியவனுகிருன்.

—•—

ஒரு சங்கதியில் பின்னுக்கு லாபம், கீர்த்தி, பட்டம் உண்டென்று தோன்றினல், அதில் உடனே கூடிக்கொள்வதும் செலவிடுவதும் பணப் புஷ்டியுள்ளவர்களின் குணம்.

# சென்றுபோன நாட்கள்

ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதி.

(549-ம் பக்கத் தொடர்ச்சி.)



அச்சுக் கோர்ப்போர் பதங்களை வெகு நெருக்கிச் சேர்த்து, பதங்களுக்கு அதிக நோவு உண்டாகப் பண்ணி விடுவது பெரிய துன்பமாகும். பல பதங்களை இடையில் இடம் விடாது ஒரே சொற்றொடராக்கி வேதனைப்படுத்துவதில் பாவம் பதங்கள் அலறிக் கூவுகின்றன. சிறு சிறு பதங்களையும் விசாலமாய்த் தூர தூரப் பிரித்து, ரயிலில் இரண்டாம் வகுப்பில் உள்ளவர்கள் இடம் விட்டு விசாலமாய் தாராளமாக உட்கார்ந்திருப்பது போல் செய்து பதங்களைப் பரவசப் படுத்த வேண்டும். மெயில் வண்டியில் மூன்றும் வகுப்பிலே நெருக்கத்தில் பிரயாணிகள் படும்பாட்டை விட, அச்சுக்கோர்ப்போரால் பதங்கள் மிகுதியும் நொந்து, உருவமும் இளைத்து, உள்ள பொருளும் கெடுவது—அவைகளைப் பெற்ற தாய்மாராகிய ஆசிரியர்களுக்குக் கனத்த கண்ணீர்ப் பெருக்கை யுண்டுபண்ணி விடுகின்றது. ஸ்ரீமான் நமச்சிவாய முதலியாரவர்களைப் போன்ற மகானுபாவர்களின் நூல்களிலே பதங்கள் விசாலித்த இடம் கொண்டு, ஒடிந்த பதங்களுக்கு வரியின் கடைசியில் (–) சிறு கோடும் இடப்பெற்று அழகு மிகுந்து ஆனந்தமாய்த் துள்ளிக் குதிக்கின்றன. பதங்களின் கருத்தும் நன்கு புலனுகின்றது. இவ்விதம் அச்சுக் கோர்ப்பதற்கு எழுத்துப் பிரதிகளிலேயே அவ்விதம் பதம் பதமாகத் தூரப் பிரித்து எழுத வேண்டுமென்று அச்சுக்கூடத்தார் நூலாசிரியர்களின் மீது குற்றஞ் சாட்டுகின்றார்கள். நூலாசிரியர்களோ தாம் எழுதிச் செல்வது எங்கே அது முடிவதற்குள் தமக்கு மறந்து போகின்றதோ வென்று மகா வேகமாய் தமது கற்பனையின் விஷயத்தை எதுவும் விட்டு விடாமல் கடிதத்தில் அடக்கி விட வேண்டி மட மடவென்று கிறுக்கிக் கொண்டு போக வேண்டியவர்களா யுள்ளவர்கள். ஆதலின் பதங்களைத் தூரத் தூர வைத்து ஒழுங்கு செய்ய அந்த எழுதும் அவசரத்திலே அவ்வளவாக சாத்தியப்படுவதில்லை.

இவ்விதம் பதங்களைத் தூரத் தூர வைத்து எழுதுவதிலே பாரதியார் மிகவும் தேர்ந்தவர். எவ்வளவு வேகமாய் எழுதிய போதிலும் ஒரு பதத்திற்கும் மற்றொரு பதத்திற்கும் வேண்டியவரை தாராளமாக இடம் விட்டு எழுதுவதையே தமது வழக்கமாகக் கொண்டவர். பாடல்களைப் பதம் பதமாய்ப் பிரித்துத் தூரத் தூர எழுதுவதுபோல் வசன நடையையும் அமைத்து வரைவார்.

பாரதியார் தமது பத்திரிகைகள் நின்றுபோன பின்னர், "சுதேசமித்திரனு"க்கு காளிதாஸன், சக்திதாஸன்

---

எங்கு பரோபகாரப் பேச்சு அதிகமாகப் பேசப்படுகிறதோ அங்கு எந்த தர்மத்தையும் காணேம், இரக்கத்தையும் காணேம், அன்பையும் காணேம், ஒரு காசுக்குக்கூடக் கணக்கு பேசப்படுவது அங்குதான்.

என்ற பெயருடன் அநேக அரும் பெரும் விஷயங்களையும் அரிய கற்பனைக் கதைகளையும் எழுதி வந்தார். "பாரத ஜன ஸபை" என்று காங்கிரஸ் மகா ஸபையின் ஆதி வரலாறுகளை ஒவ்வொரு காங்கிரஸின் நடவடிக்கைகளையும் சுருக்கமாக விவரித்து இரண்டு பாகங்களாக இயற்றினர். அதன் பின் மகாகவி ரவீந்திர நாதரின் ஐந்து வியாசங்களையும் தமிழில் மொழி பெயர்த்தார். அதிலே அவர் உபயோகித்துள்ள புதிய பதங்களும் அதை எழுதிச் சென்றுள்ள அர்த்த புஷ்டியான தமிழ் நடையும் தமிழ் நாட்டிற்குப் புதியவையாகும்.

பாரதியாரைப் பிடித்துத் தருவோருக்கு நூறு ரூபாய் பரிசு தரப்படுமென்று ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷன்களிலும் விளம்பரம் ஒட்டப்பட்டிருந்தது. அதிலே அவரது உயரம் இத்தனை அடியென்றும், கஞ்சா, புகையிலை உபயோகிப்பவரென்றும், பூணூலை எடுத்து விட்டவரென்றும் இன்னும் பல குறிப்புகளும் தெரிவிக்கப்பட்டிருந்தன.

பாரதியார் புதுச்சேரியில் பெரிய தாடிக்காரராகவும் விளங்கியதாய் அவ்வுருவில் எடுத்த படம் ஒன்றால் தெரிகிறது. இப்பொழுது வெளியிடப்பட்டுள்ள அவரது படம் அவரது வதனத்தின் உண்மையான அழகு கொண்டதாய் இருக்கவில்லை. தம்மைப் படம் பிடிக்கும்போது கூட எதையோ நினைத்துக்கொண்டு விழித்தது போன்ற நிலையில் இப்போதைய படம் உள்ளது.

பாரதியாரை மன்னித்து விடுவதாகச் சென்னை அரசாங்கத்தார் தெரிவித்த பின்பு அவர் புதுச்சேரியிலிருந்தும் வெளிவரவும், உடனே கைதியாக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். அதன் பின்பு அவரை விடுவிக்கும்படி போலீஸாருக்கு உத்திரவு வந்து அதன் பின்னர் சென்னை வந்து சேர்ந்தார். பாரதியாரின் அக்ஞாத வாசம் தீர்ந்தது. அவரைப் பிடித்த சனியும் விலகிற்று. இனி இரண்டு வியாசங்களில் பாரதியாரின் சரிதம் முடிவுபெறும்.

(தொடரும்.)

## நன்னேக்கின் முறிவு.

நன்னேக்கோ, நம்பிக்கையோ ஒரு இடத்தில் கொண்டுவிட்டு, பிறகு அதைப்பற்றிப் பிந்திய ஸம்பவங்களால் கலங்கி ஸந்தேகப்படத் தொடங்கிவிட்டால், அதற்குப் பிறகு நன்னேக்கும் நம்பிக்கையும் உண்டாவதில்லை. இந்த இடத்தில் கொள்ளும் ஸம்சயம் பெரும்பாலும் முன்னெச்சரிக்கைக்கும் நன்மைக்குமே வித்தாக முடிகின்றது. எதுவும் உள் நுழைந்து காணும் வரையில் வெகு வாஸனையாகத்தான் இருக்கிறது. பிறகோ—? சீ! என்று மனம்விட்டுப் போகிறது.




## பிழைப்புக்கு மார்க்கம்:—

**கேசவன்:**—கஷ்டப்படாமல் வயிற்று ஜீவனம் நடத்த ஒரு வழி கிடைக்காதாவென்று யோசிக்கிறேன். எதுவும் தோன்றவில்லை.

**வாசவன்:**—ஏன் தோன்றவில்லை? எவளையாவது ஒரு பணக்கார விதவையைப்பிடி. அவளுக்குத் தூபம் போடு. அவள் சொத்துக்கு நீயே மானேஜராய் விடலாம். கலகப்பட்ட வீட்டைத் தேடிப்போ. அங்கும் பலமுள்ளவன் பக்கம் சேர்ந்தால் நல்ல வரும்படியுண்டு. வாதிக்கும் பிரதிவாதிக்கும் நடுவில் உன் தலையை நீட்டு. இரண்டு பக்கமும் சுரண்டலாம். எங்கும் வீட்டுப் பெண்களை வசப்படுத்திக்கொள். நீ மறுபடியும் வருகிற தினத்தை அவர்களுக்குச் சொல்லி விடு. அவர்களும் வீட்டுக்காரனுக்கென்று பிரியமாய் சமைத்ததாக வெளியில் காண்பித்துக்கொண்டு நாலைந்து காய்கறிகளுடன் உனக்கு வட்டிக்கத் தயாராய் வைத்திருப்பார்கள். பெண்களின் முகத்துக்காக வீட்டுக்காரனும் உன்னை வா என்பான். நீயும் நன்றாக உட்கார்ந்து சில நாள் வரை சாப்பிட்டுக்கொள். ஏதோ அந்த வீட்டுக்கு விசுவாசமாக ரொம்ப உழைக்கிறவனைப் போல வேஷம்போடு. வெகு நல்ல பிள்ளைபோல் காட்டு. இப்படி எத்தனையோ வழிகளில் வயிற்று ஜீவனம் சுகமாக நடத்தி விடலாம். நியாயமாய் நடப்பவர்களுக்குத் தான் பிழைக்க வழியில்லை!

*
* *

## பால் வியாபாரம்:—

**இடையன்:**—இதோ உங்களுக்காகத் தான் கறந்த கால்படி பாலை அப்படியே வைத்திருக்கிறேன். என் பசுமாடு கறப்பதே கால்படி தான்.

**முதலியார்:**—அப்படியா? இன்னும் கூட அரைக்கால் படி வேண்டுமே.

**இடையன்:**—அடடா! நீங்கள் முன்னாலேயே சொல்லியிருக்கக்கூடாதா!

**முதலியார்:**—அப்பொழுது இந்தப் பாலிலேயே இன்னும் அரைக்காற்படி தண்ணீர் முன்னதாகவே ஊற்றி வைத்திருந்துக் கொடுப்பாயோ?

(இந்த சமயத்தில் அரைப்படி பால் வாங்கிச்சென்ற ஒருவர் காய்ச்சப் போனதும் அது உடைந்துவிட்டது என்று திருப்பிக்கொண்டு வருகிறார்.)

**முதலியார்:**—என்ன அப்பா; உன் பசு கறப்பது கால்படி தான் என்றாயே? கெட்டுப்போன பாலாகவும் வேறே அரைப்படி கறக்குமோ?

**T. S. குழந்தைவேல் முதலியார்.**

---

*வியாபாரத்தில் சகோதரமுறை கொண்டாடி இனிக்கப் பேசிக்கொள்கிறவர்கள் தங்கள் காரியம் தீர்ந்ததும் மெதுவாக நழுவிவிடுகிறார்கள். மறுபடி இன்னொரு வியாபாரம் தொடங்குகையில்தான் சகோதரப்பேச்சு வருகிறது.*

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# பழங்காலத்துப் பத்திரிகைக்காரர்கள் !



கேட்கிறீர்களா ஐயனே! இது ஒரு வியப்பான சேதி! விடா நகைப்பைக் கொடுக்கும் விசித்திரக் கதை! நகைப்பு என்றால்—அதை எந்த அர்த்தத்திலே விகடன் இங்கே உருட்டியிருக்கிறேனென்பதைக் கொஞ்சம் நினைத்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். பத்திரிகையைக் காலமுழுதும் வாங்கிக்கொண்டு பத்திராதிபரின் தலையைத் தடவிவிட்ட அண்ணாத்தைகளின் நகைப்பையே விகடன் இங்கே சொல்ல வந்தது! இந்தக் காலத்திலும் பல சிநேக அண்ணாத்தைகள், அறிமுக அண்ணாத்தைகள் பத்திராதிபர்களைச் சூழ்ந்துகொண்டு கைக்கு அகப்பட்ட புஸ்தகங்களையும் பத்திரிகைகளையும் வந்தமட்டுக்கும் லாபமென்று வாரிக்கொண்டு போகாமலிருக்கவில்லை! தாங்கள் சுற்றிக்கொண்டு போவது—தங்களுக்குப் பயன் படுமா படாதா—தங்கள் அறிவுக்கு அது எட்டுமா என்று கூட நினைத்துப் பார்ப்பதில்லை! இலவச நுழைப்பிலே லாபமாக வந்ததை யெல்லாம் வாங்கிப் போட்டு வைப்போம் என்பதே அந்த அண்ணாத்தை நரிகளின் அமுக்கிக் கொண்டு போகிற சித்தாந்தம்!

***

பழங்காலத்தில் ஒரு வேடிக்கையான சங்கதி என்னவென்றாலோ, பத்திரிகை என்றாலே, அதைப் படித்துப் பார்க்கவேணும் என்கிற ஒரு புத்தி உண்டாகாமை தான்! என்னவோ பேபராம், அது யாருக்கு வேணும் என்கிற அலக்ஷியமே அதிகம். இந்த நிலையிலே அத்தி பூத்தது போல சில புத்திசாலிகள் ஆங்காங்கு தோன்றி மின்மினியாய் மின்னிக் கொண்டிருந்தார்கள். பத்திரிகைக் காரர்கள் இவர்களை வசப்படுத்தி இவர்களை நம்பிக்கொண்டே தங்களின் பத்திரிகையைத் தொடங்க—நடத்தவேண்டி யிருந்தது! இதிலே ஒரு கும்மா குத்து என்னவெனில், சில நாளைக்கு—மாதத்துக்கு—இந்தப் புத்திசாலிகட்குப் பத்திரிகையை முன் பணமின்றி அனுப்பிக் கொண்டே காலந் தள்ளவேண்டும். அதற்குப் பிறகு பத்திராதிபர் சந்தா அனுப்பும்படி பரிதாபப் பாட்டுகள்

---

தங்கள் காரியம் முடிந்ததும், அந்தக் காரியத்தைச் சிரத்தையாய்ச் செய்து கொடுத்தவர்களை மறந்துவிடும் விஸ்வாசக் கொக்குகள்தான் அதிகம்.

பத்திரிகையில் பாடவேணும்! இதற்குப் பிறகு சிலர் நல்ல மனதுடன் சந்தாக் காசை யனுப்புவித்துவிடுவார்கள். பல நஞ்சான் குஞ்சான்களோ பத்திரிகைக்காரருக்குத் தரவேண்டிய பணத்துக்கு சொக்காய் தைத்துப் போட்டுக் கொள்வார்கள்; பலசரக்குக் கடையில் சாமான் வாங்கிவிடுவார்கள்; அல்லது வருஷா வருஷம் போடும் மாங்காய் ஊறுகாய்ச் செலவுக்கு உதவட்டுமென்று நிறுத்திக்கொள்வார்கள்! பத்திராதிபரும் நெடுநாள்வரை இந்த அறிவாளிகளுக்கு அனுப்பிவிட்டு ஓய்ந்து நின்றுகொள்வார். இந்த அறிவாளிகளும் தபால்காரனை இரண்டொரு தடவை பத்திரிகை வந்ததாவென்று கேட்டுவிட்டு 'கப்சுப்' என்று மௌனமாய் இருந்துவிடுவார்கள். இந்த விதமாகப் பழய நாளில் முன்பணமின்றிப் பத்திரிகையனுப்பி, அதிலே ஒரு ருசிகாத்தை ஊட்டுவித்து, அதற்குப் பிறகு அவர்கள் தருகிற பிச்சைக் காசான சந்தாத் தொகைகளைப் பெறவேண்டிய பாடாகப் பத்திராதிபர்களின் கதை பரிதாபமாய் இருந்து கொண்டு வந்தது.

***

இதிலே இன்னொரு சங்கதி! பத்திராதிபருக்குக் குல்லா போடுகிற கோமாளிகளைப் போலவே, முன்பணம் அனுப்பியவர்களுக்குப் பத்திரிகையை நெடுக அனுப்ப முடியாமல் நஷ்டப்பட்டு நொந்து நோவெடுத்து உள்ளது உரியதெல்லாம் விற்றுத் தோற்றுப்போன பத்திராதிபச் சாமிகளும் கடன் ஆண்டிகளும் உண்டு!

***

பத்திரிகைப் பேச்சே இல்லாத நாளில் பத்திரிகை யொன்றை ஜனங்களின் இடையே நுழைக்கிறதென்றால் அது என்ன ஒரு லேசா? ஆகவே சென்னை யரசாங்கத்தினரே இதற்கு ஒரு தூண்டுதலாய் முன்வந்து "ஜநவிநோதினி" என்று ஒரு மாதப் பத்திரிகையைத் தொடங்கி ஜனங்களுக்கு அனுப்பிப் பார்க்க முயன்றார்கள். அதற்கென்றே ஒரு பண்டிதக் கூட்டத்தையும் ஏற்படுத்தினார்கள். பத்திரிகையில் ருசி பிறக்கச் செய்வதற்கு அதிலே நல்ல நல்ல கதைகள் எழுதவேண்டுமென்று தீர்மானித்து அப்படியே தங்கக்கட்டிகளான கதைகளை எழுதத் தொடங்கினார்கள். அந்தக் கதைகளுக்காக ஜனங்கள் பத்திரிகைகளை வாசிக்கவும் ஆரம்பித்தார்கள். இந்தக் கதைகளோடு வேறு பல நல்ல விஷயங்களையும் சேர்த்து "ஜநவிநோதினி"ப் பத்திரிகையை வெளியிட்டார்கள். இது தமிழிலும் தெலுங்கிலும் வெளிவந்தது. இவ்விதம் இருபது வருஷங்களுக்கு மேலாக உழைத்துப் பத்திரிகையை நடத்தி வந்தார்கள்! மகா பெரிய கைங்கரியமே தான் இது.

***

இந்த "ஜநவிநோதினி"ப் பத்திரிகையில் வந்த விஷயங்களையே சிறிது திருத்தி சுலபப்படுத்திப் பள்ளிக்கூடத்துப் பாட புஸ்தகங்களாகவும் பிறகு ஆக்கிவிட்டார்கள். இந்தத் தேசோபகார கைங்கரியம் நெடுநாள் நடந்து வந்தது. "சப்தாத்தகாம்" என்று தெலுங்கில் ஒரு புது அகராதியும் முதன்முதலாக உண்டாக்கினார்கள். இதைப்போலவே "தினவர்த்தமானி" என்ற ஒரு வாரப் பத்திரிகைக்கும் அரசாங்கத்தார் தயவு காண்பித்தார்கள். அப்பத்திரிகையில் வெளிவந்த விஷயங்களை ஒன்று சேர்த்துப் பிறகு "விநோத ரசமஞ்சரி" என்று

---

கிராமவாசிகள் பட்டணங்களுக்கு வந்து ஜீவனார்த்தத்திற்கு நல்ல நல்ல புதிய யுக்திகளைக் கண்டுபிடிக்கிறார்கள். அதனால் உயர்ந்தும் விடுகிறார்கள்.

ஒரு தனிப் புஸ்தகமாக வெளியிட்டார்கள். அதற்கு நிகரான நூல் வேறெதுவும் இல்லை. நாளைக்கும் விலைக்குக் கிடைக்கிறது.

***

இந்தக் காலத்திற்குப் பிறகு தோன்றினார்களப்பா பல பத்திரிகைக்காரர்கள்! இவர்களிலே சிலர் ஜமீன்தார்களுடையவும், மடாதிபதிகளுடையவும் தயவைத் தேடி அவர்கள் தந்த பணத்திற்குக் காகிதம் வாங்கி அச்சுக்கூலி தந்து அச்சிட்டு வெளியிட்டு, அந்தக் காசு செலவான உடனே, பத்திரிகையின் சந்தாக்களை எதிர்பார்த்து, அது வாராமற்போகவே இடுப்பு உடைந்து சாய்ந்துபோனார்கள்! "சென்னைத் தாரகை", "ஆரிய ஜனமித்திரன்" இவைகளெல்லாம் நன்கு நடத்தப்பட்ட பத்திரிகைகள். விவேகசுந்தரம், விவேகபோதினி என்று காலணு விலையில் ஒரு பரோபகாரி பத்து இதழ்கள்வரை வெளியிட்டார். ஒரு தம்பிடி, இரண்டு தம்பிடிக்கும் பொன் கட்டிகளான புஸ்தகங்கள் வெளிவந்தன. வாங்குவோர் கொஞ்சமானாலும் முயற்சி அதிகமாய், முயல்பவர்களும் பெரிய அறிவு படைத்த மண்டைகளாயிருந்தார்கள்.

***

இந்த நாளிலே "மஹா விகட தூதன்" தோன்றி, ஜனங்களுக்குள்ளே புக வந்தது. அதற்குப் பிறகு "லோகோபகாரி" ஒன்று புறப்பட்டது. அதன் பத்திராதிபர் புதுவிதமாய் ஒரு வருஷ சந்தாவை முன் பணமாகக் கொடுப்பவர்களுக்கு ஒரு இனாம் புஸ்தகம் என்று ஒரு ஏற்பாடு செய்தார். இனாம் புத்தகமும் இரத்தின மாகதங்களாகவே இருந்தது. அதைப் பார்த்துக்கொண்டு "பிரபஞ்ச மித்திரன்" என்றும், "பிரபஞ்ச தாரகை" என்றும் பத்திரிகைகள் புறப்பட்டு இனாம் புஸ்தகங்களும், இன்னும் காலெண்டர்களும் கூடக் கொடுக்கத் தலைப்பட்டார்கள்! முன்பணம் அனுப்புவோருக்கு அவர்களின் பெயரால் ரப்பர் ஸ்டாம்பு செய்து அனுப்புவதாகவும் "திராவிட தீபம்" என்ற பத்திராதிபர் முன் வந்தார். மூன்று ரூபா வருஷ சந்தாவைச் செலுத்தியவர்களுக்கு இரண்டு ரூபா விலையுள்ள மஹா அரிய நூல் ஒன்றை இந்தப் பத்திராதிபர் தூக்கித் தூக்கிக் கொடுத்தார்! பத்திரிகைகளை ஜனங்களுக்குள் பரவச் செய்வதற்கு இவர்கள் பட்டபாடு வெகு கண்ராவி!

***

விகட குட்டிக் குழந்தைகளெல்லாம் பத்திரிகை வாசிப்பிலே ஒரு விசேஷித்த பிரியம் காட்டத் தொடங்கிய காலம் 1899-ம் வருஷக் கடைசியிலிருந்துதான்! அப்போது தொடங்கிய போயர் யுத்தம் ஜனங்களுக்குப் பத்திரிகை வாசிப்பிலே ரொம்ப ரொம்ப ருசியைத் தந்தது. பிரிட்டிஷார் போயர்களிடம் நன்றாக சிக்கிக்கொண்டு கலங்கவே, எல்லோரும் அதை கவனிக்க ஆரம்பித்தார்கள். காலணுவிலையில் பலதமிழ் பத்திரிகைகள் தோன்றலாயின. "பை பத்திரிகை" என்று ஒரு தம்பிடிக்கு ஒரு தினசரிப் பத்திரிகையும் சென்னையிலே தமிழிலும் தெலுங்கிலும் புறப்பட்டது. இதிலே இன்னொரு கூத்து! புதுச்சேரிப் பத்திரிகைகள் போயர் யுத்தத்தைப் பற்றி உண்மையாய் எழுதுகின்றனவென்றும், சென்னைப் பக்கத்துப் பத்திரிகைகளுக்கு அவ்வளவு சங்கதி

---

*சிலர் தாங்கள் எழுதும் மேஜைக்கு அருகிலேயே எச்சில் துப்பும் கிண்ணத்தையும் வைத்துக்கொள்கிறார்கள். வழக்கத்தால் அது ஒரு ஆபாசமாகப் படவில்லை போலும்!*

எட்டுவதில்லை யென்றும் ஒரு பெரிய புகார் எற்பட்டு புதுச்சேரி பத்திரிகைகளை வெகு பேர் விரும்பினார்கள்! புதுவை நேசன், புதுவை விநோதன் இன்னும் பல பத்திரிகைகள் புதுச்சேரியில் தோன்றலாயின. இதில் சிலதின் விலை காலணாதான்! அவரைக் காய்ச் செடியைப் போல ஆறு மாதத்துப் பயிர் தான்!

***

இதற்குப் பிறகு ருஷிய ஜப்பான் சண்டை புகுந்தது! அதுவும் தமிழ்ப் பத்திரிகைகளின் வாசிப்புக்கு நல்ல அபிவிர்த்தியைத் தந்தது. இங்கிலீஷ் அரசாங்கமே எங்கே ருஷியர்கள் இந்தியாவை விழுங்கிவிடுவார்களோ வென்று நடுங்கிய நிலையில் இருக்கும் போது, அப்படிப்பட்ட ஒரு பிரமாண்டமான ருஷியாவை ஒரு சிறிய தீவான ஜெப்பான் ஜயித்துப்போடுவதென்றால், அந்த சங்கதிகள் வாசிக்க மிக்க ருசியல்லவோ? ஆகவே பத்திரிகைகளில் பலருக்கும் பிரியம் ஜனித்தது! விசேஷமாய்த் தமிழ்ப் பத்திரிகைகள் பெருகிவிட்ட காலம் 1904-ம் வருஷத்தில் தான். அதற்கு அடுத்த வருஷத்தையும் சேர்த்துக்கொள்ளலாம்! அந்தப் பழைய நாளிலே பத்திரிகைக்காரர்கள் வெகு நன்றாக உழைத்தார்கள். வர்த்தமானங்களை இரண்டுமூன்று வரிகளின் கணக்கிலே நெடுக அடக்கிப் பத்திரிகை முழுதும் வர்த்தமானங்கள் நிறைந்திருக்கச் செய்து, அதற்குப் பிறகு பல பொது விஷயங்கள், நிரூபங்கள் யாவும் கொஞ்சம் கொஞ்சம் காண்பித்து ஒவ்வொன்றையும் ஒரு அளவு வைத்து அடக்கிப் பிரசுரித்து வந்தார்கள். பத்திரிகைகளும் வாசிக்க வாசிக்க மிக்க ருசிகரமாய் நானாவித அறிவகளும் நிரம்பியிருந்தன. இப்போது நீண்ட வியாசங்களைப் பக்கம் பக்கமாய்ப் பிரசுரித்து விடுவது போல அந்த நாளிலே பத்திராசிரியர்கள் செய்யவில்லை. இந்த நாளில் விளம்பரங்கள் அதிகம் கிடைப்பது போல், அந்த நாளின் பத்திராதிபர்களுக்கு அகப்படவில்லை. அகப்பட்டாலும் அதிக காசு வருவதில்லை. அதிலும் பட்டுக் குல்லா• போடும் விளம்பர சித்தர்கள் பலர் இருந்தனர்.

***

1904-ம் வருஷத்தில் ஆரம்பித்த பத்திரிகைகளிலே திருநெல்வேலி "சர்வஜனமித்திரன்" என்ற வாரம் இருமுறைப் பத்திரிகை தங்கமான பத்திரிகை. உயரிய நடைகொண்ட பத்திரிகை. அதில் வெளிவந்த ஒரு கதையே "பொற்றொடி" என்பது. அவ்வருஷத்தில் தஞ்சாவூர் ஜில்லாவில் ஏராளமான பத்திரிகைகள் புறப்பட்டன. திரிச்சிராப்பள்ளியிலும் திரிச்சி நேசன், திராவிட போதினி, பிரஜாநுகூலன், லோக வர்த்தமானி, சுபோத பாரிஜாதம், அமிர்தவசனி இன்னும் அநேகம் தோன்றின.

***

சேலத்தில், "தக்ஷண தீபம்" என்று நாடார் குலத்தினருக்காக ஒரு பத்திரிகை உதயமானது. அதற்குப் பிறகு "திராவிடாபிமானி" தோன்றியது. இவ்விரண்டும் திறமையாய் நடத்தப்பட்டன. சென்னையில் "சுதேசி" என்ற வாரம் இருமுறைப் பத்திரிகை மிக்க உன்னதமுடையதாய் இருந்தது. "இந்துநேசன்" தான் தமிழில் தைரியமாக முதன் முதலில் வாரம் இருமுறையாக வெளிவரலானது. "விஜய விகடன்" ஒரு நல்ல பத்திரிகை. 'கேசரி' என்று

---

அவர் கணக்கில் மூன்று ரூபாய் பாக்கியிருந்தும் எழுதிக்கேட்பதில்லை. பாக்கிக்காரருக்கும் மோசபுத்தியில்லை. எல்லாம் பரஸ்பரம் சந்தித்தால் எல்லா கணக்கும் சரியாகிவிடும்போலும்! இது ஒன்றுபட்ட மனத்தினர் சங்கதி,

ஒரு வாரப் பத்திரிகையும் வெளிவந்தது. அந்த சமயம் சுதேசமித்திரன் பத்திராதிபரை அரசாங்கத்தார் கைது செய்துவிட்டதால், எங்கு தங்களுக்கும் வாரண்டு வருமோ வென்று பலர் பத்திரிகைகளை நிறுத்திவிட்டனர். விஜய விகடன் பத்திராதிபர் இலங்கைக்குப்போய்விட்டார். பிரபஞ்சமித்ரன் தற்கொலை செய்துகொண்டது என்று சொல்லி அப்பத்திரிகையை அதன் சொந்தக்காரர்கள் நிறுத்திவிட்டனர். 'கேசரி'யும் நின்றது. எல்லாம் அல்லோகல்லோலமாயின.

***

இதன் பிறகு மஹா ஐரோப்பிய யுத்தம் புறப்பட்டுக்கொண்டு, அச்சு, காகிதம், பத்திரிகை, புத்தகம், அரிசி, மிளகா, புளி, நெய், எண்ணெய், விறகு, மண்ணு, மண்ணுங்கட்டி, உடுக்கும் துணி, ஏறும் வண்டி, பால், தயிர் வெண்ணெய் எல்லாமுமே பல மடங்கில் விலை ஏறிப்போயின. இதற்குப் பிறகு புதிய பத்திராதிபர்கள் புறப்பட்டார்களப்பா! இவர்கள் பழய பத்திராதிபர்களின் வழியிலே போகாமல் புது வழியிலே புகுந்தார்கள். "திராவிடன்" தோன்றி "பிராமணரல்லாதார்" என்றபதத்தை சிருஷ்டி செய்தது, ஜஸ்டிஸ் கக்ஷியும் உண்டானது. அப்பாலுள்ள கதை விவரங்கள் என் நஞ்சான் குஞ்சான்களுக்குத் தெரிந்ததே. இதிலே, விகடனுக்குப் பெரிய துணைவர்களாயும் உயிருக்குயிராயுமுள்ள முஸ்லிம் சகோதரர்கள் இருக்கிறார்களே; அவர்கள் பக்கத்துச் சார்பாகக் கொழும்பிலே "முஸ்லிம் நேசன்" என்று ஒரு வாரம் இருமுறைப் பத்திரிகை வெகு நன்றாய் அந்தப் பழய நாளில் உழைத்துவந்ததென்பதையும் இங்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இத்தனை பழம் பத்திரிகைகளிலே இப்போது ஜீவித்திருப்பதோ ஒரு நாலைந்துக்குமேல் இல்லை! இதிலே அந்தப் பழய அறிவின் முறையுடன், இப்போதைய புதிய அறிவும் கலந்து நடத்தப்படும் பத்திரிகைகள் எத்தனை யென்றாலோ அதுவும் சிறுவிரல் விட்டு எண்ணிவிடக்கூடியதுதான். இப்படிப் பழய ஞானமும் புதிய ஞானமும் கலந்த வகையிலே பரிமளிப்பவைகளுள் இந்த "**அமிர்த குணபோதினி**"யும் ஒன்று என்பதை விகடனின் குஞ்சு குழந்தைகளெல்லோரும் அறிவார்கள். அறிவது மட்டும் போதாது. **அதன் அடுத்த புது வருஷத்திற்கும் சந்தாவை மணியார்டர்கள் மூலம் அனுப்பி அநேகரைச் சந்தாதார்களாகச் சேர்ப்பித்து, விகடனாகிய என்னையும் ஊட்டி வளர்க்க வேண்டும்.** அடுத்த புது வருஷத்திலே இன்னும் அநேக அநுபவ ஞானங்களையும் லோக ரகசியங்களையும் என் விகடக் குழந்தைகளுக்கு வாரிக் கொண்டுவந்து கொடுக்கக் காத்திருக்கிறேன். இந்த விகடனும் பழங்காலத்துப் பத்திரிகைக்காரர்களில் ஒருவனல்லவா? அந்த நெடுங்காலத்து அநுபவங்களையும் நீங்கள் தெரிந்து வைப்பது நல்லதென்று இப்போது இங்கு விவரித்துவிட்டேன். பழங்காலத்துப் பத்திரிகைகள், புஸ்தகங்கள் ஏதாவது உங்கள் கைக்கு அகப்பட்டு, அது செல்லரித்ததான குப்பையா யிருந்தாலும்கூட, **அவை கிடைக்காத பொக்கிஷங்களென்றெண்ணிப் பத்திரப்படுத்துங்கள்!** பழையதுக்கே பெருமை அதிகம். பழயது பழயதே. புதியது புதியதே. **பழய முதன் மனைவி தங்கமே.** புதியவளோ?—அதற்குப் பதில் நீங்களே சொல்லிக்கொள்ளுங்கள். ராம்! ராம்! சுபம்! ஞ! சுவாஹா!!

---

விகடனில்லாத நாடக சபை பிரகாசிக்குமா? சிரிப்பே பெரியபொக்கிஷம்.




பூர்வ வினையால் காது மந்தமான வர்களைவிட, தன் வியாதிகளைப்பற்றி நோயாளி நெடுநேரமாகச் சொன்ன அவ்வளவையும் கேட்டுவிட்டு ஒரு வரியில் மருந்தெழுதிக் கொடுத்துக் கை கழுவும் டாக்டர்களுக்குத்தான் செவி மந்தம் அதிகமாயிருக்கிறதென்று விகடரிப்போர்ட்டில் சொல்லப்படுகிறதாம்!

***

தாமே மஹா தெரிந்திருப்பது போலவும், மற்றவர்கள் மூடர்களென்றும் நினைக்கிற சிலரைப் பற்றி என்ன நினைக்கிறதென்றும், என்ன பதில் சொல்லுகிறதென்றும் ஒருவர் விகடனைக் கேட்டதற்கு, அத்தகையோரைக் காலுக்கடியில் போட்டு அற்பமாய் ஒதுங்க வேண்டுமென்றும், உன் மேஜைக்கருகில் நீ குதிப்பதுபோல் பத்து பங்கு என் மேஜைக்கருகில் குதிக்க எனக்கும் தெரியுமென்று சுடச்சுடப் பதில் உடனே சொல்ல வேண்டுமென்றும் தெரிவித்தானும்!

***

சட்டுபுட்டு என்றும், கடகட மடமடவென்றும் எப்படியோ தமது வேலையை ஒரு நிமிஷத்தில் முடித்து விட்டு, அதில் என்ன குறை யிருந்தாலும் பிறகு கவனியாமல் நாற்காலியில் சாய்ந்து ஓய்ந்திருக்க விரும்புகிற அவசரக்காரச் சொகுசுப்பிரதர்களுக்கு விகடன் அடுத்த சுக்கிலப் புது வருஷத்தில் ஒரு தோட்டக் கச்சேரி நடத்தப் போகிறனும்!

பிறரை யொருவன் மற்றவர்களின் முன்பு கேவலப்படுத்தித் தன்னை உயர்த்திக்கொள்ளும்போது, அங்கிருக்கும் மூன்றுவது மனுஷ்யன் கம்மென்று வாய்மூடி யிருப்பதேன் என்று ஒருவர் விகடனைக் கேட்டதற்கு, கேவலப்படுத்தப்பட்டவனைப் பரிதாப சிந்தையோடும் நினைத்து விட்டு, கேவலப்படுத்தியவனை அல்ப நாய்க்குச் சமானமாகத் தன் மனத்துள்ளே எண்ணியதால் தான் அந்த சமயம் அந்த மூன்றுவது மனுஷ்யன் அப்படியாக வாய்மூடி யிருக்க நேர்ந்ததென்றும் பதில் சொன்னனும்!

***

நல்ல மனதுடன் கொடுக்காத பணம் நடுவழியிலேயே செலவாகி நாசமாய்விடுகிறதென்றும், ஆனல் உத்தம சிந்தையினர் உதவும் பணமோ பிராணபத்தான வியாதியோ, தத்தளிப்போ பட்டுக் கலங்கும் வேளையில் பெரிய கை உதவியாய் அவர்களுக்குக் கிடைத்து சமய ஸஞ்சீவிபோல் உதவுகிறதென்றும், ஆகவே கொடுப்பதிலும்கூட மனதின் நல்ல, கெட்ட, அதிர்ப்திபட்ட—நிலைக்குத் தகுந்தபடியே அதன் பலன்களுமிருக்கிறதென்றும் விகட சித்தர் விளம்புகிறர்.

***

(1) ஏமாற்றுகிறவன் ஏமாற்றப் படுவான். (2) பிறரைப் பழித்துக் கேலி செய்வோன் தானும் பிறகு கால வசத்தால் பழிக்கப்படுவான். (3) மோசக்காரன் தானும் மோசமே போவான். (4) பிறர் குடியைக் கெடுக்கிறவனுக்குத் தன் குடியும் பிறகு ஒருநாள் எவ்விதமும் கெடும்— என்று விகடசதகம் கூறுகிறது.

---

தன் தாய் வீட்டார் தக்கபடி சீதனம் தராது ஏமாற்றியதுபோலவே இன்னொரு பெண்ணின் தாய் வீட்டாரும் நடந்துகொண்டால், அந்த சங்கதியைத் தன் கணவனிடம் அவள் சொல்வதில்லை. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்பதாலே தான்.




# ஞானாம்பிகையின் கற்புப் பிரதிக்ஞை.

(614-ம் பக்கத் தொடர்ச்சி.)



மோஹனாங்கி எத்தனையோ ஆடவர்களின் இடுப்பை யொடித்த சித்திராங்கி. அவளுக்குத் தன் குமாரன் எம்மாத்திரம்? எவ்விதமும் ஞானாம்பிகைக்குப் பொட்டு கட்டி விடுவதென்று தீர்மானித்து விட்டாள். குணசீலனோ கவலை மிகுந்தவனாய் தன் மனைவியின் தாய் வீட்டினரைத் தனக்கு உதவி செய்யும்படி வேண்டி அதற்காகக் கும்பகோணத்திற்குப் புறப்பட்டுச் சென்றான். அவன் இல்லாத சமயமே தக்க நேரமென்று, அவன் சென்ற ஒரு வாரத்திற்குள் ஜம்புபுரி கோவிலில் பொட்டு கட்டுவதற்கு சகல ஏற்பாடுகளையும் மோஹனாங்கி செய்து வைத்து விட்டாள். வாரமாகியும் குணசீலனோ இன்னும் திரும்பி வரவில்லை. ஞானாம்பிகையோ தன் தாயின் காரியங்களைக் கண்டு தத்தளித்து நின்றாள். ஒரு வேதியர் மோஹனாங்கியிடம் நெடுநேரம் எதோ பேசியிருந்து விட்டு அப்பால் ஞானாம்பிகையை நெருங்கி அவளை ஆசீர்வதித்து முகத்தைத் தடவி இன்னும் கொஞ்சம் தடவ முயன்றார். ஞானாம்பிகையோ அவரைப் பிடித்துத் தள்ளி விட்டு அப்பாற் சென்றாள்.

“ஏண்டி குட்டி தங்கமே! நான் தொட்டால் என்னேடி?” என்றார் புண்ணியசீலரான பிராமணோத்தமர்.

“அடி என்ற அவ்வளவு வார்த்தை வேண்டாம். இப்படித் தடவ வந்து என் கற்பை உறிஞ்சுகிற சூதும் வேண்டாம். உங்கள் மனைவியை என் அண்ணன் அடியே என்று அழைத்துத் தொட்டால்—அணைத்தால்—ஏண்டி குட்டி தங்கமே என்று கொஞ்சினால்—அப்பொழுது உமக்கு எப்படியிருக்கும்?—தூரப்போம்— என்றாள் ஆக்கிரகத்துடன் ஞானாம்பிகை.

இது வேதியருக்கு மனதில் ‘சுருக்’ என்று பட்டது. இது நடந்த மறுநாள் இரவு ஜம்புபுரிக் கோயிலுக்குத் தன் குமார்த்தியை யழைத்துக்கொண்டு மோஹனாங்கி வந்திருந்தாள். இரகசியமாய்ப் பொட்டுகட்டி விடுவதற்காக ஒரு பிராமணரிடமும் சொல்லி வைத்திருந்தாள். கையில் வெற்றிலைப் பாக்கு மஞ்சளுடனும் மோஹனாங்கி நிற்க, அந்த சமயம் கோயில் பிராமணர் ஞானாம்பிகையின் அருகில் வந்து அவளுக்குக் குங்குமப் பிரசாதம் தர, அதே சமயம் ஞானாம்பிகையின் கழுத்தில் திடீரென்று மாங்கல்யத்தை எவரோ கட்டி விட்டு மறைந்தனர். பிரசாதம் தந்த பிராமணர் ஞானாம்பிகையை ஆசீர்வதித்தார். அவளோ

---

அதிர்ஷ்டம் பெருகிக்கொண்டு வரும் வழியிலே ஒரு சகிக்கொணாத பாடும் உடன் கூடிக்கொண்டு சிவனே என்று கலங்கவைத்துவிடுகிறது.

தன்னைக் கோயிலுக்குப் பொட்டுகட்டி விட்டார்களே யென்று கலங்கிப் பிரலாபித்தாள். புலியினிடம் அகப்பட்ட மான் என்ன செய்யும்? மோஹனாங்கி ஆநந்தக் களிப்புடனும் நின்றாள்.

மறுதினம் மத்தியானம் குணசீலன் வீட்டிற்கு வந்து சேர்ந்து தன் தாயின் காரியங்களைக் கண்டு "என் அம்மா இப்படிப் பிடிவாதம் பிடித்துக் கெடுத்தாய்" என்றான். அதற்குமேல் தன் தாயோடு பேசுவதற்கு அவன் பிரியப்படவில்லை. "என்னை எவரும் புது சோபனம் செய்துகொள்ள முடியாது, நான் எவ்விதமேனும் சமயம் பார்த்திருந்து ஆறு குளங்களில் விழுந்து பிராணனை விடப் போகிறவள். நீ என்ன காவல் காத்தாலும் ஏமாறுகிற வேளை ஒன்று இருக்கும். நீ எனக்குத் தாயல்ல, சத்துரு" என்று கண்டிதமாய்த் தெரிவித்து விட்டாள் ஞானாம்பிகை.

மோகனாங்கிக்குத் தன் பெண்ணின் மனோ உறுதி இப்பொழுது தான் தெரிந்தது. அவள் பிராணனை விட்டுவிடக் கூடுமென்று நிச்சயமாய்க் கண்டு கொண்டாள். இரவும் பகலும் அதே விசாரமாய்க் காவலாக நின்றாள்.

***

குணசீலனுடைய மனைவியின் தமயனாகிய மகாதேவனுக்குக் கும்பகோணத்தில் விவாகம் என்று எல்லோரும் புறப்பட்டுச் சென்றனர். முகூர்த்தம் பகல் ஒரு மணிக்கு என்று குறிக்கப் பட்டிருந்தது. பெண் வீட்டார் பெண் மாதவிலக்காய் விட்டதால் மூன்றாம் நாள் ஸ்நானம் முடித்துத் தஞ்சாவூரில் 9-மணி வண்டியிலேறி 12-மணிக்குக் கும்பகோணம் வருவதாய்த் தந்தி தந்திருந்தனர். மோஹனாங்கியை அந்த விவாகத்திற்கு வந்திருந்த ஒரு கனவான் சந்தித்தார். அவரிடம் தான் ஞானாம்பிகை பழய நாளிலே நிச்சயமாய்ப் பிறந்தாள்.

"முகூர்த்தமோ ஒரு மணிக்கு; பெண் வீட்டினரோ 12-மணி வண்டியில் வருவார்கள். அதுவரை இங்கிருந்து என்ன செய்ய? சுவாமிமலைக்காவது போய்த் திரும்பலாம்" என்று அந்த கனவான் மோஹனாங்கியை அழைக்கவே அவளும் அவருடன் புறப்பட்டுச் சென்றாள். ஞானாம்பிகையை அழைத்ததற்கு அவள் வர மறுத்து விட்டாள். குணசீலனும் தனக்கு விவாக ஜோலிகள் இருக்கிற தென்று சொல்லி விட்டான்.

முகூர்த்த காலமும் வந்தது. 12-மணி வண்டியில் பெண் வீட்டார் வாராததால் விவாக வீடு மிக்க குழப்பமாய் இருந்தது. ஞானாம்பிகைக்குப் பொட்டு கட்டிய விஷயம் ஊரார் அறிய வைத்துச் செய்யவில்லையாதலால் ரகசியமாக இருந்தது. ஞானாம்பிகையும் தனது மாங்கல்யத்தைக் கோயிலிலேயே பிடிங்கி எறிந்து விட்டிருந்தாள். ஆதலின் அவள் கழுத்தில் பொட்டு கட்டிய அடையாளம் ஏதுமில்லை. ஆகவே ஞானாம்பிகையை மகாதேவனுக்குத் தரும்படி ஸகல பந்துக்களின் முன்னிலையில் குணசீலனைக் கேட்டனர். அவனும் அடங்காக் களிப்புடன் சம்மதிக்கவே குறித்த முகூர்த்தத்தில் விவாகமும் நிறைவேறியது. எல்லாச் சடங்குகளும் முடிந்து நலுங்கு வைத்துக் கொண்டிருக்கும்போது மோகனாங்கியும் கனவானும் வந்து சேர்ந்தனர்.

---

இந்தப் பக்கத்திலே தன் குமார்த்திக்குப் பேரன் பிறந்தான் என்று கடிதம். அதே நேரத்தில் உத்தியோகத்திலுள்ள தன் குமாரனுக்கு ஜன்னி என்று ஒரு தந்தி! சந்தோஷப்படுவதா? அலறுவதா?

மோஹனாங்கி ஞானம்பிகையை விவாக கோலத்தில் கண்டு திடுக்கிட்டாள். ஜம்புபுரி கோயிலுக்கு அவளை நான் பொட்டு கட்டியிருக்க, எப்படித் துணிந்து என்னைக் கேட்காமல் இந்த அக்கிரமம் செய்யலாம் என்று கர்ஜித்தாள். குணசீலன் எழுந்து பின் வருமாறு சபையோரைப் பார்த்துக் கூறினான் :—

"நான் என்ன தடுத்தும் என் தாயார் ஞானம்பிகைக்குப் பொட்டு கட்டவே தீர்மானித்து விட்டார். மிக்க கவலையுடன் இவ்விஷயத்தை, ஞானம்பிகை எவரிடமாக என் தாய்க்குத் தோன்றினளோ அவருக்குத் தெரிவித்து ஆலோசித்தேன். அவர் என்னோடு என் மாமி வீட்டிற்கு வந்து ஞானம்பிகையை என் மனைவியின் தமையனான மகாதேவனுக்கு மண முடிப்பித்து விடுகிறதென்று திட்டம் செய்தார். என் தாயார் ஜம்புபுரி கோயிலில் எந்தப் பிராமணரைப் பொட்டு கட்ட ஏற்பாடு செய்திருந்தாரோ அதே பிராமணரைப் பணத்தால் வசப்படுத்திக்கொண்டு தெய்வ ஸந்நிதியில் மாங்கல்யத்தை அவரே பெண்ணின் கழுத்தில் கட்டாமல் மகாதேவன் கையில் கொடுத்துக் கட்டுவிக்கும்படி செய்யுமாறும், அதற்கேற்ற பிராமண வேடத்துடன் அங்கு அவன் வந்து நிற்பானென்றும், அந்த சமயம் என் தாயார் மகாதேவனைக் கண்டு விடாதபடி இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடு செய்திருந்தோம். அவ்விதமே கோயில் குருக்கள் என் தாயாரைத் தமது சமீபமாய் அழைத்து அர்ச்சனை செய்த தேங்காய் முதலியவைகளைத் தந்து, இனி பொட்டு கட்டலாமா என்று கேட்க, என் தாயாரும் தலையசைக்க, அதற்கு இன்னொருவரிடம் ஸ்வாமி கையில் வைத்தெடுத்த மாங்கல்யத்தைத் தந்து அனுப்பியிருக்கிறேனென்று குருக்கள் தெரிவிக்க, அதே சமயம் மகாதேவன் ஞானம்பிகையின் கழுத்தில் பின்புறமாக மாங்கல்யத்தைக் கட்டி விட்டு மறைந்தான். ஞானம்பிகையைச் சுற்றி அவள் பக்கமாக எனக்கு வேண்டிய இஷ்டர்கள் பதினைந்து பேருக்கு மேல் அந்த ஜனக்கூட்டத்தில் நின்றதால் மகாதேவனைத் தப்பிப் போகும்படி செய்து விட்டனர். ஞானம்பிகை எறிந்து விட்ட மாங்கல்யத்தை அக்கோயிலிலேயே மற்றொரிடத்தில் மறைந்து நின்று நான் எடுத்து வைத்திருந்து இப்போது அந்த மாங்கல்யத்தைக் கொண்டு திருமணத்தை நிறைவேற்றினேன். தஞ்சாவூரிலிருந்து பெண் வீட்டார் வரப் போகிறார்களென்றது கட்டுக் கதை. முகூர்த்த வேளையில் என் தாயார் தடுக்காதிருக்க, ஞானம்பிகையின் தந்தை அவரைச் சுவாமி மலைக்கு அழைத்துக்கொண்டு போய் விட்டார். இதுவே நடந்த விஷயம்" என்று யாவும் சொல்லி முடித்தான்.

***

மோகனாங்கி ஆத்திரம் பொங்கி நின்றனளாயினும், மிகுந்த மூர்க்கரான ஞானம்பிகையின் தந்தையை எதிர்த்துக் கொள்ள முடியவில்லை. அவரே இதுவரை ஞானம்பிகையின் ஸம்ரக்ஷணையை நடத்தி வந்திருக்கிறார். விவாகத்திற்கு வந்தோரனைவரும் குணசீலனின் பக்கமே நின்றனர். என்ன செய்வாள் மோகனாங்கி? அவளும் மனக்கசப்புடன் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் நலுங்கிடலானாள். ஞானம்பிகையின் கற்புப் பிரதிக்ஞையும் நிறைவேறியது.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

எவ்விதமோ பரோபகாரக் குஞ்சுகளாகத் தங்களைக் காண்பித்துக் கொண்டு தங்களின் ஜீவனத்துக்கு ஒரு வழி தேடிக்கொண்டு விடுகிறார்கள்.




# பிரிந்த காதலர்.

## நள—தமயந்தி.

வீமராஜன் அரண்மனே.

வாசற் காப்போன் :—இதென்ன இது! அரண்மனை யருகில் ஆரவாரமாயிருக்கிறது. புதிதாய் யாரோ வந்திருப்பது போலக் காணுது; இதோ அந்தப்புரத்துத் தாதி ஓடிவருகிருள்; அவளை விசாரிப்போம்.

(தாதி வருதல்.)

வாசற் காப்போன் :—தாதியம்மே! ஏது அந்தப்புரத்தை விட்டு நீ வெளியே இவ்வளவு தூரம் வந்தது? அவசரமாய் ஒடுகிறையே, என்ன விசேஷம்?

தாதி :—அண்ணே! இங்கே ருதுபன்னன் என்கிற அயோத்தி அரசன் வந்து இறங்கியிருக்கிருன். அவனிடம் சாரதியாய் ஒருவன் வந்திருக்கிருன். கையோ குட்டையாயிருக்கிறது. கன்னங் கறேலென்று பார்க்க வழங்காமலிருக்கிருன். நெருப்பில்லாமலே சமைக்கின்ருன். ஜலம் இல்லாத பாத்திரத்தில் அவன் கண்பட்டால் ஜலம் உடனே உண்டாகி விடுகிறது; இப்படி என்னென்னவோ அதிசயங்கள் செய்யவல்லவனும்.

வாசற் காப்போன் :—ஆ, ஆ, இதென்ன ஆச்சரியம்! இதெல்லாம் உண்மையாயிருக்குமா அம்மா?

தாதி :—ஆம் அண்ணே! நெருப்பில்லாமலே சமைக்க நான் கண்ணுலே பார்த்தேன். இந்தச் செய்தி நம்முடைய தமயந்திக்குத் தெரிந்து அவன் சமைத்த பதார்த்தத்தைக் கொஞ்சம் வாங்கி வரச் சொன்னுள். அப்படியே வாங்கி வந்து கொடுத்தேன். இன்னெரு அதிசயம் கேட்டையா அண்ணே! பிறகு தமயந்தியம்மாளுடைய மக்கள் இரண்டும் அவனண்டை போனபோது அவைகளைப் பார்த்து அவன் கண்ணீர் விட்டுக் கதறியழுதான். என் அழுகிருயென்று நான் கேட்டேன். அதற்கு இக்குழந்தைகள் போல் எனக்கும் இரண்டு குழந்தைகள் உண்டு. அவைகளையெல்லாம் விட்டு நான் காட்டுக்குப் போய் விட்டேன். இதுகளைப் பார்த்தபோது எனக்கு அந்த நினைவு வந்ததென்ருன்.

வாசற் காப்போன் :—அவன் நளசக்ரவர்த்தி தானு யென்ன! மாறுவேடம் பூண்டு வந்திருக்கிருனே! தமயந்தி அம்மாளை நடுக்காட்டில் தூக்கத்தில் பாதி புடவையைக் கிழித்துக் கொண்டு அல்லாடவிட்டுப் போனுரே; அந்த நளன் இவர் தான் போல் தோற்றுதே! இதில் என்னவோ மறைப்பாட்ட மிருக்கிறதம்மா.

தாதி :—ஆம் அண்ணே, தமயந்திக்கும் அப்படியே தோன்றியிருப்பதாகக் காணுது. ஒருவன் தன் உருவை மறைக்கலாம். தன் குண ஸ்வபாவங்களை மறைப்பதென்ருல் சுலபத்தில் ஆகிறதா? மிக்க கம்பீரமான உருவமாய்க் காணப்படுகிருன். இப்போது நம்ம ராஜா சொன்னதாய்ச் சொல்லி

அந்தத் தேரோட்டியைத் தன்னிடம் அழைத்துவரச் சொன்னாள். போக வேண்டும்; பிறகு யாவும் வந்து சொல்லுகிறேன்.

**வாசற் காப்போன் :—** நல்லது அம்மா, போய் வா; உனக்கு என்னவோ மகா யோகம் வரப்போகிறது, என்னை மாத்திரம் அப்பொழுது மறந்து விடாதே.

**தாதி :—** உம்முடைய சக்கட்டமும் சாமர்த்தியமும் எனக்குத் தெரியாதா? தமயந்தியம்மா சந்தோஷப்பட்டால் எல்லோருக்குமே பாக்கியம் தான்.

(போகிறாள்.)

## II

**தாதி** நளனிடம் சென்று **அவனைக் கண்டு** சொல்லுகிறாள் :—

சாரதி யாகவந்த தனஞ்சயா சொல்லக்கேளும்
தாரணி புகழ்வதாகத் தயவுட னரசியற்றும்
ஏரணி வீமராஜ னெழிலுட னழைக்கச்சொன்னார்
சீருட னேடிவந்தேன் சீக்கிரமாய் வாருமையா.

## III

## தமயந்தி தானே எண்ணிக் கொள்ளுதல்.

தரு—இராகம். உசேனி—தாளம்.

பல்லவி.

கண்ண னருளுமோ என தெண்ணமுடியுமோ!

அநுபல்லவி.

மண்ணுலகினில் மறுபடிநான் நண்ணலாகுமோ நளனே— (கண்)

சரணம்.

வனந்தனிலே விட்டுப்போன மன்னனே யானாலும்
மனந்தனிலே மாறுகொண்டு மறுக்க நேருமோ! என்னை— (கண்)

## IV

(தாதி நளனை யழைத்துக்கொண்டு தமயந்தியிடம் வருகிறாள். அவனைக்கண்டதும் தமயந்தி திடுக்கிடுகிறாள்.)

**தமயந்தி :—** தேவரையுந் தள்ளிவிட்டுத் தேமாலை யிட்டவென்னை
பூவுலகில் கைவிடேன்எனப் போற்றிக் கைப்பிடித்துக்
காவலறக் காட்டில்விட்டா னளனன்றி யிவ்வாறும்
காவலன் வேறுருண்டு கண்டிருந்தால் சொல்லுவையே?

**நளன் :—** மாதரசே கேளாய்நான் மதிமயங்கிக் கலிவலியால்
மேதருமி ராஜ்ஜியமெல்லாம் விட்டுனையுங் கானகத்தில்
வேதனை யாகவிட்டேன் உருக்குலைந்தேன் கலிநீங்கக்
காதலா லுனைக்காணக் கருதியிங்கு வந்தேனே.

**தமயந்தி :—** சந்திர குல தீரனே! தார்புனையு மார்பனே! மந்தாகிரி தோளனே! மன்னர் பணி தாளனே! மகிபனே! அந்தமுள வீரனே! அவனி புகழ் மாரனே! ஐயனே! விந்தையிகு மெய்யனே! மேகமெனுங் கையனே! மாசிலா மதிகுல மன்னர் களித்திட வளம்பெறும் நிடத நாடாளும் மகராஜனே

பூச்சக்ரக் குடை நிழலில் புடைசூழ அரசரோடு பொருந்தியே இருந்த காலமும் போயினதுவோ ! இதென்ன அலங்கோலமோ !

தரு—இராகம்—முகாரி—அடதாளம்.

பல்லவி.

பாவிநா னிவ்வுருக்காணவோ—மனந்துணிந்தாய்
பணிவாரைப் போய்ப்—பணிந்தாய் ?

அநுபல்லவி.

தேவர்கொடுத்தவர மாவதனைத்தும்—பொய்யோ
ஆவிமெழுகதுபோ லாகவுருகு—தையோ !— (பாவி)

சரணங்கள்.

தங்கப்பிரகாச நிறம்—போச்சே—முடியணிந்த
தலையிற் குல்லாயணிய—லாச்சே ;
சிங்கம் நரியருகில் சேர்ந்தாற்போலடுத்—தீரே
செங்கோல் பிடித்தகையில் சவுக்கொன்றைப் பிடித்—தீரே—(பாவி)

குண்ணரு கொருபாட்டை—கண்டே—பிரியமனம்
கூசாமல் யோசித்துக்—கொண்டே ;
அண்டையில் படுத்திருந்தே யதிநித்திரை செய்யும்—போதே
அடவியில் பிரிந்தென்னை நடந்தீரல்லவோ—முன்னே— (பாவி)

விதியை வெல்லுவ—தருமை—சிறுமை யெல்லாம்
வென்றதல்லவோ—பெருமை ;
மதியுமிரவியும் வாயுதேவனு—மறிய
மன்னவனே நான் சொன்னேன் மனக்கவலை ஏன் ? விடும்—(பாவி)

நளன் :—நானுனைத் தனியாய்விட்டு நடந்தது மெய்தான் காட்டில்
போனவன் வருமுன்பாகப் புதுமணஞ் செய்வாருண்டோ ?
மானிலத் தரசரெல்லாம் வரச்சுய மரமுஞ்சாற்றி
ஏனிந்த நினைவுகொண்டா யெந்தனுக் குரைப்பாய் மானே ?

தமயந்தி:—தீதிலா வயோத்தி நாட்டில் தேவரீ ரிருப்பதாக
மேதினி தனிலேயுள்ள வேதியர் வந்துரைத்தார்
ஆதலா லிதனைச்சொன்ன லகத்தியம் வருவீரென்றே
நாதனே நினைத்தேனென்சொல் நம்புவீ ருண்மை தானே.

(ஆகாயத்திலிருந்து சந்தேகந் தெளிவ
தற்காக வாயு பகவான் சொல்வது.)

வாயு பகவான் :—காலமூ வாண்டுங்கற்பைக் காத்தஅத் தேவிதன்னை
சாலிமா தவட்கு மேலாய்ச் சாத்தலாங் குற்றமில்லை
மாலடி பணியுந்திவ்விய மன்னனே யோசியாமல்
சீலமாய் அவளைக்கூடிச் சேர்ந்துநீ வாழலாமே.

தமயந்தி:—விண்ணுடர் சொன்னதுவு மெய்ப்படலை யோமனது
கண்ணுளா வுன்வடிவைக் காணமனங் காதலித்தேன்
எண்ணுது மெண்ணுவதே னேழையின் மேற் கோபமினி
பண்ணுதென் முகம்பார்த்துப் பழயவடி வெடுப்பீரே.

நளன் :—என் சுயரூப மெடுக்கும்பொருட்டு எனக்கு வரப்பிரஸாதமான வஸ்திரம் ஒன்றுண்டு; அதை யெடுத்துக்கொண்டு இதோ ஒரு நொடியில் பழய உறவுடன் வருகிறேன். பெண்ணரசே.

(நளன் செல்லுகிறான்.)

தமயந்தி :—ஆரடி பாங்கிமாரே! என் தாய் தந்தையரையும் மக்களையும் அழைத்து வாருங்களடி. என் ஸந்தோஷகாலமும் இப்போது தான் வந்தது.

## V

(நளன் பழய வடிவெடுத்துத் திரும்பி வருகிறான்.)

நளன் :—

ஆசையு மறிவுமுந்த னன்பையு மறிவேன் பெண்ணே
பேசரும் விண்ணோர் வார்த்தை பேதமே யில்லையானால்
வாசுகி யெனும்பாம்பன்று வனத்தினி லெனக்களித்த
தூசினை யணிந்திப்போது சுயவடி வானேன் பாராய்.

(இச்சமயத்தில் வீமராஜன் முதலானவர் வந்து சேர:)

நளன் :—

அலைகட லுலகில்வாழ்வோ ரனைவரு மிகிழ்வதாக
நலமிலாச் செய்கையாலே நகர்முதல் யாவுந்தோற்றேன்
கலிதேவன் மாயையாலே கானகந் திரிந்து வந்தேன்
வலிவுள்ள மாமாவுந்தன் மலரடி போற்றி போற்றி.

வீமராஜன் :—

மன்னவர் மன்னவாழி! மகுடாபி ஷேகாவாழி!
கன்னல்வில் மதனவாழி! கனகபூ ஷணனேவாழி!
மின்னொளி தமயந்திய்யும் மேன்மையா மக்களோடு
என்மரு மகனேநீயு மெந்நாளும் வாழி வாழி!

ருதுபர்னன் :—

பாரெலாம் புகழ்படைத்த பாக்கியவானே யும்மைத்
தேரினை யோட்டவைத்த செய்கையும் நீதியாமோ?
நேராக வென்மனத்தில் நிருபனென் றறிந்திருந்தால்
சீராயென் னரசையீந்து திருப்பணி செய்குவேனே.

நளன் :—

நல்லது பயப்படாதே நம்மிட செயலீதல்ல
வல்லவன் கலிதான் செய்த வஞ்சக மீதாமப்பா
எல்லோரு மாவிந்தத்திற் கின்றையதினமே போவோம்
சொல்லரும் ருதுபர்ன்னநீ சுகமுடன் வருகுவாயே.

(யாவரும் நிடத நாட்டிற்குச் செல்கின்றனர்.)

நளனும் தமயந்தியும் அரசு பொருந்தி
சுகமே வாழ்கின்றனர்.

முற்றிற்று.




## 2. அற்ப குணம்.

(598-ம் பக்கத் தொடர்ச்சி.)

**121. ஒட்டை நாழிக்குப் பூண் கட்டியது போல்.**

**122. விளக்குமாற்றுக்குப் பட்டுக் குஞ்சம் கட்டியது போல்.**

அற்பர்கள் தங்களைத் தாமே சிறப்புப் பண்ணிக்கொண்டால் அப்பொழுது இவ்விரு பழமொழிகளையும் எடுத்துச் சொல்வது வழக்கம். நாகரீகம், ஒழுங்கு, தாரதம்மியம் எதும் அறியாத பட்டிக்காட்டானொருவன் இருபத்தைந்து ரூபாய்க்கு ஜவுளிக்கடையில் ஒரு பனாஸ் சால்வையை வாங்கித் தலையில் கோணமாணமாய்ச் சுற்றிக் கட்டிக்கொண்டு கீழே அழுக்கு வேஷ்டியும் உடம்பெல்லாம் திறந்தமாதிரியாயும் போகிறான். அவனை மதிப்பார் யார்? சிரிப்பார்களே யன்றி அவனைப் பொருட்படுத்தமாட்டார்கள். துஷ்டத் தன்மையுள்ளவனும், வீட்டுப் பெண்களை மயக்கி வலை வீசக்கூடிய அபாய குணமுள்ளவனும், கல்வி மணம் எதுமற்றவனுமான ஒருவன் தடபுடலாக உடுத்திக்கொண்டு ஆரவாரமாய் ஒருவரது வீட்டுக்குள் நுழைகிறான். **அவ் வீட்டுக்காரன் அவன் வந்ததைக் குறித்து ஜாக்கிரதைப்பட்டுக்கொண்டு நிற்பானே தவிர,** அவனது உடைகளின் மேன்மைக்கு ஒரு மதிப்பு கொடுத்துக் கௌரவிக்கப் போகிறதில்லை. உள்ளுக்கு அற்ப குணத்தை வைத்து மூடிக்கொண்டு வெளிக்கு இவ்வித ஆடம்பரங்கள் எத்தனை செய்தாலும் அதை லக்ஷ்யம் பண்ணி அவனுக்குக் கௌரவம் தருவார் ஒருவருமில்லை. இவ்விதமே வேலைவெட்டி எதுமின்றி, தன் ஜீவனத்துக்கு வேலை எதுவும் தேடிக்கொள்ளாமல் வீட்டில் உண்டுவிட்டு மிக்க அலங்காரமாக ஊர் சுற்றி வருகிறவனையும் அவனது அலங்காரத்துக்காக எவர்களும் பொருட்செய்ய மாட்டார்கள். '**என்ன வேலையி லிருக்கிறாய்**' என்று அவனைக் கேட்கப் போக, அதற்கு அவன் '**சும்மா தான் இருக்கிறேன்**' என்று சொல்லும் பொழுது, அந்த அற்பத்தன்மையினனை அவ்வளவோடு மதித்து, பிறகு அதிகப் பேச்சு வைத்துக்கொள்ளாமல் விலகிக்கொள்வதுதான் எவர்களும் செய்யும் காரியமாய் இருக்கும். பெரிய வீடுதான், மாடிமேல் மாடிதான், நல்ல பணக்காரர்கள்தான், ஆனாலும் என்ன, தங்கள்மீது உயிருக்கு உயிராயும், எவ்வளவோ அன்பாயும், தங்களையே பெரிதும் நம்பியிருந்தவர்களுமான மனுஷ்யர்களிடம் அற்ப குணத்தைக் காட்டி அவர்கள் தங்களிடம் சேரவொட்டாமல் மெதுவாக

---

பழிப்புக்குணம் பெருகிவருகிறது. பிடிவாதகுணம் முற்றிச்செல்லுகிறது. எதிர்க்கும்புத்திதான் எங்கெங்கும் விர்த்தியாகிறது. இன்னோர் மனோ நிம்மதியைக் கொலை செய்துவிட்டுத் தவிப்போராவர். வேறு பயன் எதுவுங் காணார்.

விலகிக்கொண்டு அவர்களை அன்னியர்களைப்போல் நடத்தி உதறிவிடும்போது, இந்த அற்ப குணத்தினரை அவர்களின் அற்ப தன்மைக்காக வியசனத்துடன் ஒதுக்கித் தள்ளுவதை யன்றி அவர்களின் பணத்துக்கும் மாடி வீட்டுக்கும் யார் மதிப்பு கொடுத்து கௌரவிக்கப் போகிறார்கள்? இவ்விதமே சிலர் விவாகத்துக்கு முன் வெகு அன்பினர்களா யிருந்து, விவாகம் ஆனவுடன் தாங்கள் புது மனுஷ்யர்களாக மாறி எல்லாவித அன்பையும் கொன்று விட்டு, கடிதங்கள் எழுதுவதையும் நிறுத்திவிட்டு, மிக்க அற்ப தன்மையாக நடந்துகொள்வார்களானால், அத்துடன் அவர்களை விட்டு விலகிவிடுவதே யன்றி அவர்கள் தாங்களே தூக்கிச் சுமந்துகொள்ளும் புதிய கௌரவத்துக்கு யார் மதிப்பு கொடுத்து லக்ஷயம் செய்யப்போகிறார்கள்? இவ்விதமே நண்பனொருவன் நய வஞ்சகம் முற்றி ஒட்டை நாழியாய்விடும்போது அவன் எத்தனை மேன்மையுற் றிருந்தபோதிலும் அந்த மேன்மையை எவர் மதிக்கப் போகிறார்கள்?—அவனது அற்ப குணத்தைத்தான் முதலாவதாகக் கவனித்து அவனை இகழ்ச்சிப் படுத்துவார்கள். அற்பகுணமுள்ளவன், அல்லது அற்பத்தன்மையில் மிஞ்சிப் போய்விடுகிறவன், எவ்வளவு மேன்மையுற்றிருப்பினும், எவ்வளவு ஆடம்பர உடைகளிட்டுக் காட்டிக்கொள்ளினும் அவற்றை யெல்லாம் லக்ஷியம் செய்யாமலும், மயங்காமலும் அற்பன் என்று மனம் வெறுத்து ஒதுங்குவார்களே யன்றி அவனோடு ஒருமித்திருக்க எவரும் ஒப்பமாட்டார்கள். அவன் எவ்வளவு நெருங்கிய சுற்றத்தானாயினும் அவனைப்பற்றி ஒரு கௌரவமாகவும் கருதமாட்டார்கள். அற்பத்தன்மை அவ்வளவு கேவலப்பட்ட வஸ்து. அற்பத்திற்கு எந்த நாளும் பெருமை ஏற்படப் போவது மில்லை. அற்பம் பெரிய குணங்களை எந்த நாளும் பெறவுமாட்டாது என்பதும் இந்தப் பழமொழியின் கருத்து.

ஒருவனைப் பார்த்து உனக்குப் பசித்த வேளையில்வந்து புசித்துப் போவென்றும் தாராளமாய் வீட்டுக்குள் வரலாமென்றும் அன்புடன் இரக்கமாய்ச் சொல்ல வாய் வந்ததும், எங்கே அவன் வேலை வெட்டியின்றி சும்மா நம் வீட்டிலேயே குந்திவிடுகிறானோ வென்று, எண்ணி, அப்போது நாம் சொல்லவந்த வார்த்தையை அவ்வளவில் நிறுத்தி ஜாடையாயிருந்து கொள்ளும்படி நேர்கிறது. அது அவன் நலம் கருதியே.

## 123. எலிப் புழுக்கை இரப்பிலிருந்தென்ன வரப்பிலிருந்தென்ன?

இரண்டும் ஒன்றுதான். அற்பம் எங்கும் அற்பமே என்றபடி. ஆட்டாம் புழுக்கையா யிருந்தால், வரப்பிலிருந்தாக்கால் எருவாகும் என்று அதைப் புலத்தில் தள்ளிப் போவார்கள். எலிப் புழுக்கையை அவ்வளவாக யார் கவனிக்கப் போகிறார்கள்? ஒருவருமில்லை. என்? அது அற்ப குணமுள்ளது.

---

தன் மாமி நாத்திகளை எதிர்த்துக்கொண்ட பெண்ணுக்குப் பிற்காலத்தில் அவளை எதிர்த்துக் கேவலப்படுத்தும் மருகியே வந்து வாய்த்துவிடுகிறாள். இது முன் வினை!

ஆகவே அது எங்கிருந்தாலும் என்ன ? எல்லாம் ஒன்றுதான். அற்பம் எங்கும் அற்பமே. பெரிய வீடும் செல்வமும் கூடியிருந்தும், உறவினரிடத்து அன்பில்லாமல் உதட்டுறவாய் நிற்கும் அற்பர்களை மற்ற பந்துக்கள் மதிக்கும் மதிப்பும் இவ்வளவுதான். ஏராளமான செல்வத்தைப் பெற்றிருந்தும் தரித்திர நினைவினராய் ஒரு அணு வண்டிக்குக் கொடுத்து ஏறிவாமல், எங்கு பணம் செலவாய்விடுகிறதோ வென்று கால்நடையாய்ப் பல மைல்கள் தூரம் நடந்து செல்லுகிறவர்களைப்பற்றி உலகத்தார் என்ன மதிப்பு கொடுக்கப்போகிறார்கள்? தம்பி தன் பெண்களுக்கு விவாகம் செய்துவைப்பதற்குக் கதியில்லாமல் ஏழெட்டு வருஷங்களாய் பெரிய பெண்களானவர்களையும் வீட்டில் வைத்துக் கொண்டு திகைத்து நிற்கும்போது, அண்ணன் ஆரவார வாழ்விலிருந்து கொண்டு தம்பியின் விஷயத்தைச் சற்றுமே கவனியாதவனாய் இருந்தால் உலகினர் அந்த அண்ணனின் செய்கைக்கு வெறுப்பார்களேயன்றி அவனை ஒரு கௌரவப் பொருளாய் நினைக்கப்போகிறார்களா ? அவனுக்கு எவ்வளவு செல்வம் கிடைத்தென்ன ? இந்த ஏழைத் தம்பியையக் கொஞ்சமாவது கவனிக்கக் காணேமே என்றுதான் பழிப்பார்கள். இவ்வாறு உதவாத—பயன்படாத தன்மையிலுள்ள அற்பர்கள் எவ்வளவு உயர்ந்து நின்றாலும் பெருமை ஏது என்றபடி.

## 124. ஆண்டியை அடித்தானும், அவன் குடுவையை உடைத்தானும்.

என்ன பிரயோஜனம் ? அப்படிச் செய்ததனால் என்ன கீர்த்தி வந்து விட்டது ? ஆண்டியும் அவன் குடுவையும் அற்ப பதார்த்தங்கள். அவனை அடிப்பதிலும் அவன் குடுவையை உடைப்பதிலும் நமக்கு ஏதாவது மேன்மையுண்டாகப் போகிறதா ? அற்பர்களை ஒரு பொருட்டாய் எண்ணி அவர்களின் பேரில் பகை பாராட்டுவது கூடாது; அது இழிவு என்றபடி. நம்மிடத்திலேயே புசித்துக்கொண்டு நம்மீதே புகார்கள் சொல்லும் அற்பர்கள் அநேகர் இருக்கிறார்கள். நாம் எவ்வளவு வெறுத்து ஒதுக்கினும், வீட்டிலுள்ளோருடன் பேச்சு வைத்துக்கொள்ள வேண்டாம் என்று பலமுறை கண்டித்து விலக்கி யிருப்பினும் இந்த அற்பர்கள் நம் வீட்டிற்குத் தாங்களாகவே வலிய வந்து குந்திவிட்டுப் போகிறவர்களாய் இருக்கிறார்கள். நம்மீது புகார்கள் சொல்லுகிறவர்களும் நம் வீட்டிற்கு அடிக்கடி விருந்து மனுஷ்யர்களாய் வருவோர்களுமாகிறார்கள். அவன் என்னை மிகவும் அவமானப்படுத்திவிட்டான் என்று நம்மைப்பற்றிப் பலரிடமும் இகழ்ச்சியாகப் பேசிவிட்டுப் பிறகு நம்மிடமே வந்து குலாவுவோரும் இருக்கிறார்கள். காலமுழுதும் கெட்ட நினைவிலேயே ஊறிப்போய், இவனும் வாழ்கிறானே என்று நம்மைப்பற்றிப் பொறாமை நினைவுகொண்டு, மேலுக்கு வெகு உருக்கமாய் நம்மிடம் கொஞ்சிப் பேசுவோரும் இருக்கிறார்கள். நம்மையே ஏமாற்றி நமது கழுத்தில் ஒரு உதவாத கட்டையைக் கட்டிவிட்டவர்களும் அடிக்கடி நம்மிடம் வருகிறார்கள். எவ்வளவோ பொல்லாங்குகளைச் செய்தும், நம்மை ஆபத்துகளில் சிக்கவிட்டும் தவிக்கப் பண்ணிவிட்டும் பிறகு நம்மிடம் சரசமாய் பேச வருகிறவர்களும்

---

இவருக்கு அந்த மனுஷ்யன் ஒரு கேவலமான பதராகத் தோற்றுகிறான். அந்த மனுஷ்யனோ இவரை ஒரு அல்ப புழுவாக நினைத்து, ஐயோ! நல்ல குணம் காணேமே என்று அருவருக்கிறான். இதில் உயர்ந்தது எவரோ ?

இருக்கிறார்கள். உள்ள நாளெல்லாம் நமது கஷ்டத்தை உட்கார்ந்துகொண்டு தின்றுவிட்டு, அவனா, அந்தப் பயலா, அவன் நாலணா தினக் கூலிக்குப் போய்ப் பிழைத்தவன்தானே என்று நம்மைப்பற்றிக் கேவலமாய்ச் சொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள். ஒருவன் தன் தாயாருக்கு எவ்வளவோ விசுவாசமாய் நடந்துகொண்டாலும், அவனைப்பற்றித் துவேஷமான எண்ணமே வைத்துத் தன் பிரியத்தை எல்லாம் தனது குமார்த்திகளின் பிள்ளைகளிடம் செலுத்தி நடந்துகொள்ளுகிற விபரீதத் தாய்மாரும் இருக்கிறார்கள். இவர்களெல்லாம் நமக்கு என்ன பொல்லாங்குகள் செய்தாலும்கூட, அவர்களை அற்பர்களாய் எண்ணி ஒதுக்கி நாம் மௌனமாய்ப் போய்விட வேண்டுமேயன்றி, அவர்களை எதிர்த்துக் கொண்டு சண்டையிட்டு, மனம் போனவாறு பேசி நாமும் அற்பர்களாய் நடந்துகொண்டு விடக்கூடாது. வரட்டும் போகட்டும் இருக்கட்டும். நாம் மட்டும் ஒதுங்கிக் கொண்டு போய்விடுவோம். ரயிலுக்குப் பணமில்லை, ஊருக்குப்போன முதல் தினமே பணத்தை யனுப்பிவிட்டு மறுகாரியம் பார்ப்பேனென்று சொல்லி ஐந்து பத்து வாங்கிச் சென்று பிறகு அதைத் தராமலே போய், அப்பால் நாம் அதை மறந்துவிட்டதாக நினைத்து நம்மிடம் பிறகு வந்து உறவாடுகையில்—அத்தகையோருக்கும் ஒருதலையசைப்பு அசைத்துவிட்டு நாம் தூரப்போய்விட வேண்டியது தான். இந்த அற்பர்களை ஒரு பொருட்டாய் மதித்து அவர்களைச் சரிக்குச் சரியாக எதிர்த்துக்கொள்வது நமக்குக் கௌரவமல்ல என்பது இப்பழமொழியின் கருத்து.




(தொடரும்.)

## மனோதர்ம பேதம்.

ஒருவனது மனோதர்மத்தின் பேதத்திற்கேற்பத் தன் முன்பு எதிர்ப்படுவதொன்றினைக் குறித்து அவன் உள்ளம் ஒருவிதமான தீர்மானம் கொள்ளும்படி அவனைத் தயாராக்குவிக்கின்றது. குழந்தைக்கு இட்ட முத்தத்தை மனைவிக்கு இடுகையில் மனோதர்மமும் மற்ற உணர்ச்சிகளும் மாறுகின்றன. மனைவிக்கு இடும்முத்தத்தில் முதலில் எழுவது காமம். அதனைப் பின்பு அடக்கியாள்வது அறிவு. விவாக ஸம்பிரதாயம் காமத்தை ஒரு எல்லைக்குள்ளும் ஒரு குறித்த காலத்துக்குள்ளும் நிற்க வைத்துக் காம உணர்ச்சியைத் தணித்து சித்த விகாரத்தை நிவர்த்தித்துத் தர்மபுத்தியை வளர்க்கிறது.

# ஞானமிர்தம்

**1. கடவுளின் இயற்கை:**—ஓர் அரசன் ஒரு தத்துவ ஞானியிடம் சென்று, கடவுளின் இயற்கையைப்பற்றி விவரித்துக் கூறும்படி வேண்டி னன். அந்த ஞானி யோசித்துப் பதிலளிப்பதாகக் கூறி மூன்று நாட்கள் அவகாசம் வேண்டுமென்றார். நான்காவது தினத்தில் அரசன் வந்து கேட்ட பொழுது, அவர் மறுபடியும் மூன்று தினங்கள் வேண்டுமென்றார். இம்மாதிரி நாலைந்து தடவைகள் செய்துவிட்டு அவர் கடைசியில் 'கடவுளைப்பற்றி நான் அதிகமாக நினைக்க நினைக்க, அவர் விவரித்தற்கரிய இயற்கையை யுடையவ ராகிறார். அவர் அநிர்வசனீயமான பொருள் என்று மட்டும் தான் கூற முடியும்.' என விடை பகர்ந்தார்.

**2. சரியான பதில்:**—இந்திய நாட்டுப் பாபிகளை மோக்ஷக்கரைக்கு சேர்க்கவேண்டுமென்ற பரோபகார சிந்தையைக் கொண்டு ஒரு கிறிஸ்துவப் பாதிரி ஒரு கிராமத்தில் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். அங்கு அவர் வெகு அருமையான வழிகளில் ஹிந்து மதத்தைக் கண்டித்து விட்டு, 'உங்கள் கல்லுச் சாமியை நான் தடி கொண்டு அடித்தால், என்ன செய்துவிடும்?' என்று கேட்டார். அக்கூட்டத்தில் இருந்த ஒரு சாமானிய குடியானவன், 'நான் உங்கள் ஏசுவைத் தூஷித்தால் அவர் என்ன செய்துவிடுவார்?' என்று பதில் கேள்வி கேட்டான். 'உன் மரணத்திற்குப் பிறகு நீ தண்டனையடை வாய்' என்று பாதிரி பதில் புகன்றார். 'அவ்விதமே எங்கள் சாமியும் உன்னை மரணத்திற்குப் பிறகு தண்டிக்கும்' என்று குடியானவன் விடை பகர்ந்தான்.

**3. அன்பின் பொருட்டு அன்பு:**—தர்மமே உருவெடுத்து வந்த யுதிஷ்டிரர் சத்துருக்களுடைய சூழ்ச்சியால் இராஜ்ஜியத்திலிருந்து தூரத்தப்பட்டு, தன் இராணியுடன் வனவாசம் செய்ய நேர்ந்தது. அப்பொழுது ஒரு நாள் திரௌபதி அவரை நோக்கி, 'நீங்கள் பகவானிடம் அத்தியந்தமான பிரேமை யும் பக்தியும் கொண்டிருந்தும், ஏன் இவ்வளவு கஷ்டமநுபவிக்கவேண்டி வந்தது?' என்று கேட்டாள். அதற்கு யுதிஷ்டிரர் 'திரௌபதி! அதோ பார்! ஹிமாலய மலை எவ்வளவு ரமணீயமாய் இருக்கிறது! அதனிடம் எனக்கு எவ்வளவு பிரியம் இருக்கிறது தெரியுமா? அந்த மலை எனக்கு என்ன லாபத் தைத் தருகிறது? ஒன்றுமில்லை. அப்படி இருந்தும், அழகும் காம்பீர்யமும் படைத்த வஸ்துக்களிடம் பிரேமை கொள்வது எனது இயற்கையானதால் நான் அம்மலையைக் காதலிக்கிறேன். அவ்விதமே பகவானிடம் பக்தி கொள் வது எனது சுபாவம்; அது என்னுடன் ஜனித்த இயற்கை. அவர் சகல ஆநந்தத்திற்கும் அழகிற்கும் உறைவிடம். அவர் ஒருவரே அன்பு கொள்ளக் கூடிய வஸ்து. நான் அவரிடம் ஒன்றும் வேண்டுவதில்லை; ஒன்றும் யாசிப்ப தில்லை. பகவத் பக்தி என்னுடைய மாற்ற முடியாத இயற்கை. அன்பின் பொருட்டு அன்பு செலுத்த முடியுமே யன்றி, அன்பில் வியாபாரமும் பேர மும் செய்வது என்றால் முடியாது' என்று பதில் கூறினர்.

**4. சாக்ஷிகள்:**—ஆகாயம், பூமி, கடல், சூரியன், சந்திரன், வாயு, கினி, பகல், இரவு, இரண்டு ஸந்தி காலங்கள், அந்தராத்மா, தர்மம், ஹ்ருத

---

தலை முழுகின ஈரம்கூட காயாதிருக்க அவ்வளவு அவசரமாய்ச் சமையல் செய்யப் புறப்பட்ட பெண்ணுக்குத்தான் கடைசியிலே எச்சிலைப் புசிப்பு!

யம்—இவைகள் எப்பொழுதும் மனிதன் செய்யும் காரியங்களை கவனித்துக் கொண்டே இருக்கின்றன. மனிதன் தனிமையாக இருப்பதாக எண்ணிக் கொண்டு அக்கிரமம் செய்வது மதியீனமேயாகும்.

5. **உலகத்தின் முடிவு**:—எமர்ஸன் என்ற மேனாட்டு அறிஞரும் அவருடைய நண்பர் **பார்க்கர்** என்பவரும் அந்தியப் பொழுதில் உலாவிக் கொண்டிருக்கையில் ஒரு மனிதன் அவர்களிடம் பதைக்கப் பதைக்க ஓடிவந்து 'உலகத்தின் முடிவு நெருங்கிவிட்டது, ஐயா!' என்று கூறினான். உடனே எமர்ஸன் மிகவும் அமைதியாக 'என் நண்பனே! ரொம்ப சரி! அப்படி உலகம் முடிவடைந்து விடுவதாகவே வைத்துக்கொண்டாலும், அதின்றியே நான் வாழ முடியுமென்று எண்ணுகிறேன்.' என்றார். நம்மில் எத்தனைபேர்கள் அதேமாதிரி அமைதி காட்ட முடியும்?

6. **ஸித்திகள்**:—ஒரு யோகி ஒரு ஞானியிடம் சென்று, தான் ஆகாயத்தில் பறக்க முடியுமென்றும், அநேக நாட்கள் பூமிக்குள் வாழக்கூடுமென்றும், நீர்மேல் நடக்கமுடியுமென்றும் இன்னம் பல அரிய சித்திகளைச் சம்பாதித்திருப்பதாகவும் பெருமை பாராட்டிக் கொண்டார். அந்த ஞானி சாந்தமாக 'நண்ப! பக்ஷிகள் ஆகாயத்தில் பறக்கின்றன; புழு பூச்சிகள் மண்ணுக்கடியில் வசித்து வருகின்றன; மீன்கள் நீர் மீது செல்லுகின்றன; அவைகள் செய்யும் காரியங்களைச் செய்வதால் உனக்கு என்ன லாபம் உண்டு? அந்த அற்ப பிராணிகளைப் பின்பற்றுவதைவிட, கடவுளைப் பின்பற்றி அவரைப் போன்று அபார கருணையும் ஞானமும் பெற முயற்சி செய். இந்தத் தற்பெருமை பாராட்டுவதை விட்டுவிடு' என்று உபதேசம் செய்தார்.

7. **சிருஷ்டியின் சூக்ஷ்மம்**:—நாம் ஏதோ சில புத்தகங்கள் அதிகமாகப் படித்துவிட்டதாலேயே நம் முன்னோர்களைவிட அறிவு அதிகம் பெற்றதாக எண்ணி விடுகிறோம். ஆனால் உண்மை விஷயமோ இன்னும் சிக்கலாய்க் கொண்டே போகிறது. எல்லையற்ற சிருஷ்டியைப் பூர்த்தியாக ஆராய்வதற்கு நம்முடைய அற்ப சக்திகொண்ட மனதினால் முடியாது.

8. **விசேஷ உபதேசம்**:—ஓர் அரசன் ஒரு ஞானியிடம் சென்று 'பரப்பிர்ம்மத்தின் இயற்கை என்ன?' என்று கேட்டான். ஞானியோ பதிலேதும் கூறாமல் இருந்தார். அரசன் வெகு நாழிகை காத்திருந்து அடிக்கடி தன் கேள்வியைத் திருப்பித் திருப்பிக் கேட்ட பிறகு, ஞானி வாயைத்திறந்து, 'அரசனே! இவ்வளவு நாழிகையாக நான் உனக்கு விடை கூறிக்கொண்டு தானிருந்தேன். மௌனம்தான் பிர்ம்மத்தின் இயற்கை.' என்றார்.

9. **ஸத்யத்தின் பெருமை**:—ஒருசமயம் ஆயிரம் அஸ்வமேதயாகம் செய்து சம்பாதித்த புண்யத்தையும் ஸத்யத்தையும் இரு தட்டுகளில் வைத்து நிறுத்துப் பார்த்ததில் ஸத்யமே அதிக கனமாயிருந்தது. ஸத்யமே யாவற்றிற்கும் மேலானது; ஸத்யமே தர்மம்; அதுவே தபஸ்; அதுவே யோகம்; அதுவே நித்ய வஸ்து; பரப்பிர்ம்மம். (தொடரும்.)

முமுக்ஷு.

---

தாம் அன்றுகொண்ட பகையை எந்தக் காலத்திலும் விடாமல் ஒரு பக்கத்தில் வைத்துக்கொண்டே வெகு இனிக்கப் பேசுகிறவர்கள் சிலர் உண்டு.




(591-ம் பக்கத் தொடர்ச்சி.)

356. Wheresoever the search after truth begins, there life begins. Wheresoever that search ceases, there life ceases.

RUSKIN.

உண்மையை நாடி மனது எங்கே அல்லது எப்போது செல்ல ஆரம்பிக்கிறதோ அங்கே அல்லது அப்போது தான் வாழ்க்கை ஆரம்பிக்கிறது. அந்த நாட்டம் எங்கே முடிவாகிறதோ அங்கே தான் வாழ்க்கையும் முடிவடைகிறது. ரஸ்கின்.

357. The truths of nature are one eternal change, one infinite variety. RUSKIN.

இயற்கையின் உண்மையான வழக்கங்கள் எப்பொழுதும் முடிவு பெறாத மாறுதல்கள் தான். ரஸ்கின்.

358. Sweet Spring, thou com'st with all thy goodly train.

W. DRUMMOND.

இனிமையான வஸந்தமே! உன்னுடைய எல்லா நல்ல பரிவாரங்களுடனும் நீ வருகிறாய்.

W. ட்ரம்மண்ட்.

359. Love all, trust a few, do wrong to none.

SHAKESPEARE.

எல்லாரையும் நேசி, கொஞ்ச பேர்களை நம்பு. ஒருவருக்கும் தீங்கு செய்யாதே. ஷேக்ஸ்பியர்.

360. Fair be the path beneath your feet, Bright be the skies above you. Where'er you go, still may you meet Friends that will truly love you!

CLIFTON BINGHAM.

உன் கால்களின் கீழுள்ள பாதை அழகாகவும் உன் தலை மேலுள்ள ஆகாயம் பிரகாசமாயுமிருக்கிறது. நீ எங்கே சென்றாலும் உன்னை உண்மையாய் நேசிக்கிற நண்பர்களை இன்னும் மேன்மேலும் சந்திப்பாய்.

க்ளிப்டன் பிங்ஹாம்.

361. Follow Light, and do the Right—for man can halfcontrol his doom. TENNYSON.

ஒளியுள்ள அறிவின் பாதையைப் பின்பற்று. நல்லதைச் செய். இப்படி இருந்தால் ஒருவன் தன் விதியைப் பாதி அடக்குகிறான். டென்னிஸன்.

362. Dignity, and even holiness too, sometimes, are more questions of coat and waistcoat than some people imagine.

DICKENS.

கண்ணியமும் சில சமயம் பரிசுத்தமும் கூட சில மனிதர்கள் நினைப்பதைக் காட்டிலும் வெறும் மேல் சட்டையை ஒத்த விசாரணைகள்.

டிக்கன்ஸ்.

---

ஒரு நாவிதன் இன்னொரு நாவிதனுக்கு க்ஷவரம்செய்தால் கூலி கேட்பதில்லை. ஆனால் பத்திராதிபர்களோ மற்றொரு பத்திராதிபரிடம் சிறு சங்கதிக்கும் கூலிப்பணத்தை எதிர்பார்க்கிறார்கள்! கண்டிப்பாயும் வாங்குகிறார்கள்!

363. The trees now naked groaning, Shall soon wi'leaves be hinging, The birdies dowie moaning, Shall a' be blithely singing. BURNS.

இப்பொழுது மொட்டையாயும் சப்தித்துக்கொண்டு மிருக்கும் மரங்கள் சீக்கிரம் இலைகளோடு சேர்க்கப்படும். இப்பொழுது வருத்தத்துடன் சப்தித்துக் கொண்டிருக்கும் பறவைகள் எல்லாம் சீக்கிரம் சந்தோஷத்துடன் பாடிக் கொண்டிருக்கும். பர்ன்ஸ்.

364. Nothing useless is, or low; Each thing in its place is best. LONGFELLOW.

ஒன்றும் உபயோக மற்றதுமல்ல. தாழ்ந்ததுமல்ல. எதுவும் அததன் இடத்தில் மிகவும் மேலானது.

லாங் பெல்லோ.

365. Beauty and difficulty go together, and we shall find that they are only mean and paltry difficulties it is wrong or contemptible to wrestle with.

RUSKIN.

அழகும் கஷ்டமும் இணை பிரியாதவை. ஆனால் நாம் கண்டு கொள்வது என்னவென்றால் அந்தக் கஷ்டங்களெல்லாம் அவைகளோடு நாம் மன்றாடுவது பிசகு அல்லது கேவலம் என்னும்படியான அவ்வளவு அற்பமானவைகள். ரஸ்கின்.

366. How far that little candle throws its beams! shines a good deed in a naughty world.

SHAKESPEARE.

ஒரு சிறிய எரியும் வத்தியானது எவ்வளவு தூரம் அதன் வெளிச்சத்தைக் கொடுக்கிறதோ, அதே மாதிரியாக ஒரு நல்ல காரியமானது கெட்ட உலகத்தில் பிரகாசிக்கிறது.

ஷேக்ஸ்பியர்.

367. Things done well, And with a care, exempt themselves from fear. SHAKESPERE.

ஜாக்கிரதையுடனும் நன்றாகவும் செய்யப்பட்ட காரியங்களுக்கு ஒருபொழுதும் பயமில்லை.

ஷேக்ஸ்பியர்.

P. E. பாஷியம் நாயுடு.

## அது தன் சௌகரியத்துக்காக அப்பா!

ஒரு குடியன் மற்றொருவனைக் குடியனுக்குவது அவனால் தனக்கும் குடிச்செலவுக்குக் கிடைக்கவே. ஒருவன் தான் தெரிந்துள்ள தொழிலில் மற்றவனைப் பழக்குவதும் தனக்கு சௌகரியமும் லாபமுமா யிருப்பதற்கே. தன் விஷயங்களில் தன் மனைவியையும் பங்குபெறச் செய்வதேன்? தனக்கு அவள் துணையாயிருப்பதற்காக. இவ்விதமே ஒரு நாட்டார் மற்றொரு தேசத்தில் தங்கள் வாழ்வு சுலபமாய் இருப்பதற்காக தங்கள் நாகரீகத்தையும் வழக்க பழக்கங்களையும் அங்கே பரவச்செய்து அவற்றை ஏற்றவர்களின் மூலமாகத் தங்கள் ஜீவியம் சுலபமாய் சௌகரியமாய் இருக்கும்படி செய்து அவர்களையே ஊழியர்களாகவும் கொள்கிறார்கள்!




1. ரோஜாவைப் பற்றிய சில விநோதங்கள் :—முன் காலத்தில் ஸிரியர் என்னும் ஜாதியாரால் என்றும் அழியாத் தன்மைக்கு அடையாளமாக ரோஜா புஷ்பம் கருதப்பட்டிருந்ததாம். சீனு தேசத்தில் சவக் குழியின்மேல் ரோஜாவைப் புதைக்கிறார்களாம். ஜெரீசோ என்னும் ரோஜா ஜாதியை கிருஸ்த்மஸ் பண்டிகையன்று சாயந்திரம் ஜலத்தில் நனைத்தால் வரும் காலம் காண்பிவிக்கும் என்று ஜெர்மனியார் நினைக்கிறார்கள். வருஷத்தில் எதோ ஒரு நாளில் ரோஜாவின் ஹ்ருதயம் தங்கமயமாகிறது என்று பர்ஷியர்கள் எண்ணுகிறார்கள். இலையுதிர்காலத்தில் வெள்ளை ரோஜா புஷ்பித்தால் வீட்டில் சீக்கிரம் ஒரு சாவும் சிவப்பு ரோஜா புஷ்பித்தால் ஒரு கல்யாணம் ஏற்படும் என்று அமெரிகா ஐக்கிய மாகாணங்களில் எண்ணம். தன் தேகத்து ரத்தத்தில் ஒரு துளியை ரோஜா புதரின் அடியில் கொட்டினுல் தன்னுடைய கன்னங்கள் ரோஜா மாதிரி சிவக்கும் என்று இங்கிலாந்திலும், பிரான்ஸிலும், இத்தாலியிலும் கன்னிகைகளால் கருதப்படுகிறது. துருக்கியா தேசத்து கன்னிகைகள் தங்களுக்கு வந்திருக்கும் வரன்களின் பெயரைச் சொல்லி ரோஜா இதழ்களை ஒவ்வொன்ருய் ஜலத்தில் போட எந்த இதழ் வெகு நேரம் அமிழாமல் மிதக்கிறதோ அந்த இதழில் குறிப்பிக்கப்பட்ட வரனையே கல்யாணம் செய்துகொள்வார்களாம்.

2. ஒரு மனிதன் சாதாரணமாய் நடந்து சென்ருல் ஒரு மைல் தூரம் செல்வதற்கு 2264 அடி எடுத்து வைக்கிருனும். அதேதூரம் ஒரு துவிசக்கர வண்டியில் செல்வதற்கு சாதாரணமாக 627 தரம் கால்களை சுற்றுகிருனும்.

3. ஒரு பெரிய நீர் வீழ்ச்சியின் சப்தம் லக்ஷக்கணக்கான காற்றடங்கிய நீர் குமிழிகள் வெடிக்கிறதினுல் உண்டாகின்றதாம்.

4. மரண தண்டனை பின்வருமாறு சில தேசங்களில் விதிக்கப்படுகின்றனவாம். ஆஸ்திரியா, இங்கிலாந்து, போர்டுகல், ருஷியா, (நியூயார்க் தவிர மற்ற அமெரிகா ஐக்கிய மாகாணங்கள்) இந்தியா முதலிய தேசங்களில் தூக்குமரமும், இக்வெடார், ஒல்டென்பர்க், ஸைபீரியா முதலிய தேசங்களில் துப்பாக்கிப் பிரயோகமும் சீனு, ப்ரஷியா, ஸ்பெயின், ஸ்விட்ஜெர்லண்டு முதலிய தேசங்களில் கத்திப் பிரயோகமும், பெவேரியா, பெல்ஜியம், பிரான்ஸ் ஹானேவர் தேசங்களில் கில்லடைன் என்னும் தலைவெட்டியெறியும் யந்திரமும், ப்ரன்ஸ்விக்கில் கோடாலிப் பிரயோகமுமாம். நியூயார்க்கில் "ஸிங்ஸிங்" என்று சொல்லப்படும் மின்சார நாற்காலியில் உட்காரவைத்து குறித்த நிமிஷத்தில் ஒரு பொத்தானை அமுக்க உடனே முடிவாம். இடாலி தேசத்தில் மரண தண்டனையே கிடையாதாம்.

*தேசாபிமானிகளிற் சிலர் ஏழை எளியவர்களைக் கவனிப்பதில்லை. ஆனுல் தங்களுக்குக்கீர்த்தி பெருகக்கூடிய தலைவர்கள் வரும்போதுமட்டும் தலை துள்ளிய பிரசங்கங்கள் செய்கிருர்கள். உள்ளுக்கு சுயநலம் என்னவோ மாறுவதில்லை. தங்களின் பிரஸித்தபெயரால் நல்ல வருமானமுமடைகிருர்கள்.*

5. கிராமபோன் வாத்தியத்தின் எஃகு ஊசிகள் நாளடைவில் தகட்டுகளைத் தேய்த்துவிடுவதோடுகூட ஊசிகளையும் இரண்டாந்தரம் உபயோகிக்க முடியாமல் அதிக செலவாகிறது. இதற்காக அநேக நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். மரத்தினால் ஊசி செய்தார்கள். பித்தளையினால் ஊசி செய்தார்கள். மரகதத்தினால் ஊசி செய்தார்கள். இவைகளெல்லாம் பிரயோஜனப்படவில்லை. ஏனென்றால் பிளேட்கள் தேய்கிறதோடுகூட கீறல் சப்தமும் நிற்கவில்லை. இப்பொழுது புதிதாக எலும்பு ஊசிகள் செய்யப்பட்டிருக்கின்றன. இவைகள் கெட்டியாயிருப்பதோடுகூட தகட்டுகளுக்கு ஒரு கெடுதியும் செய்யாமல் காதிற்கு சப்தம் இனிமையாயும் இருக்கின்றதாம். மேலும் ஊசி தேய தேய, நுனியை கூருக சீவிக்கொண்டே போகலாமாம்.

6. பண்டைக் காலத்தில் மிருகங்களின் தோலை நாணயமாய் உபயோகப்படுத்தினார்களாம். நம்முடைய நாட்டில் கிராம குடியரசு நடந்துவரும் காலத்தில் கிராமத்திலுள்ள வண்ணான், அம்பட்டன், வேளாளன், வைத்தியன், மேளகாரன், தோணி தள்ளுகிறவன், அங்காடிக் கூடைகள் முதலிய எல்லாருக்கும் தானிய வகையே நாணயமாய் கருதப்பட்டு இப்பொழுதும் சில கிராமங்களில் அவ்வழக்கம் நடைபெற்று வருகிறது. காபிரி ஜாதியில் மாடுதான் நாணயமாம். ந்யூகயானாவில் பெண் அடிமைகள் நாணயமாம். அபிஸினியாவில் உப்பும், பிஜி தீவில் திமிங்கில பல்லும், தென் அமெரிக்கா மத்திய பாகங்களில் முட்டையும், ஆபிரிகாவில் கடற்கரை யோரங்களில் கோடாலிகளும், மேல் இந்திஸ் தீவுகளில் ஊசியும், அஸ்டெக் தேசத்தாரில் தங்கத்தூள் நிறம்பியுள்ள இறக்கை பேனுக்களும், மத்திய ஆபிரிகாவில் பேனுகத்தி, ஈட்டி இவைகளும் நாணயமாய் உபயோகப்படுகின்றனவாம்.

S. A. ஸ்ரீநிவாச சர்மா.

## வாக்குத்திடன்.

ஒருவனுடைய வாக்குத்திடன் அவன் தனது அறிவின் சேமிப்பால் பெற்றுள்ள விசாலித்த ஹிருதய சக்தியின் திறத்துக்குத் தக்கபடி எழுகிறது. அவனது வித்வத்வ நிபுணத்தில் ஒன்றைப்பற்றிப் பிழையறத் தெரிந்துகொண்டுவிட்டதின் சந்தேகமில்லாத நிலைமைக்குத் தக்கபடி அவனது வாக்கு அழுத்தமாயும் துணிச்சலாயும் உறுதியாயும் எழுந்து தனது சொல்லைக் கடைசிவரைக்கும் அது சரியென்றே நிச்சயப்படுத்திவிடத் தைரியத்தைக் கொடுக்கிறது. ஆகவே, அறிவின் தெளிவுக்கும் அதிகரிப்புக்கும் தக்கபடியும், அதன் பக்குவமான அநுபவத்திறனுக்கு ஒத்தபடியும் வாக்குத்திடன் வலிமைகொண்டு உயர்ந்து சமாளித்துநிற்கத் துணியும்.

# சாஸ்திர நுட்பங்கள்.

(601-ம் பக்கத் தொடர்ச்சி.)

154. துத்தம் வன்மையும் நீல வெள்ளையுமான லோகம். வியாபாரத்தில் வரும் துத்தம் சுத்தமல்ல. பெரும்பாலும் அத்தோடு ஈயமும் இரும்பும் சிலவேளை பாஷாணமும் கலந்திருக்கும்.

155. ஈயம் மெதுவும் நீல நரை நிறமுள்ள லோகம். ஈயம் பெலனற்றது. துப்பாக்கி ரவையின் ஈயத்தில் பாஷாணம் சேரும். அச்செழுத்து வார்க்கும் ஈயம் மூன்று பங்கும், அந்திமனி ஒரு பங்கும் சேர்ந்த கலவை. இது லேசில் உருகி, ஆறும்போது விரியுமாதலால் அச்சின் வடிவம் திட்டமாய்க் கொடுக்கும்.

156. செம்பின் நஞ்சுக்கு பச்சை முட்டையின் வெள்ளைக்கரு நல்ல மாற்று. சீனியையும் இரும்பப் பொடியையும் சேர்த்தும், அல்லது பாலையும் இதற்கு மாற்றாகக் கொடுப்பார்கள்.

157. இரசம் மிக மினுக்கமும் பாரமும் வெள்ளி நிறமுள்ள நீரான லோகம். இரசம் தாபமானி நபமானி முதலான விஞ்ஞானக் கருவிகள் செய்வதிலும், வைத்தியத்திலும் அதிகமாய்ச் செலவழியும். இரசம் ஒரு பங்கும் தகரம் நாலு பங்கும் சேர்ந்த கலவையை கண்ணாடியில் படலமாக ஒட்டி முகக்கண்ணாடிகள் செய்வார்கள்.

158. பொன் காசு நகை முதலியவைகளுக்கு ஏற்றவன்மை கொள்ளும்படி வெள்ளியாவது செம்பாவது எப்பொழுதும் சேர்க்கப்படும். பொற்காசில் செம்பு பெரும்பாலும் பத்திலொரு பங்காய் சேர்ந்திருக்கும். பொன் சுத்தமோ அல்லவோ என்று அறிவதற்கு உரைகல்லில் உரைத்துப் பார்க்கிறது வழக்கம். அதின் திறமையை மாற்றென்ற சொல்லினால் குறிப்பார்கள். சுத்த பொன் பத்தரை மாற்றென்றும், நகைக்குச் சேர்க்கும் நயந்த பொன் எட்டு மாற்றென்றும் சொல்வார்கள்.

159. உலகத்தில் செய்யப்படும் சீனியில் நானூற்று ஐம்பது கோடி இராத்தல் கரும்பிலிருந்தே வரும். கரும்பை நசுக்கி சாற்றை எடுத்து பூர்த்த சுண்ணாம்பு கொஞ்சம் சேர்த்துச் சூடேற்றுவார்கள். சுண்ணாம்பானது சாற்றின் புளிப்பை நீக்குகிறது.

160. ஐரோப்பாவிலே பிரான்சு முதலிய தேசங்களில் சீனி அதிகமாய் பீற்கிழங்கிலிருந்து செய்யப்படும்.

161. பாஷாணம் சவ்வீரம் முதலிய நஞ்சுகளானது உடற் பகுதிகளுடன் சேர்ந்து அவைகளின் தொழிலை நிறுத்திவிடுவதால் பிராணன் பிரிந்துவிடுகிறது.

162. இறைச்சிக்கு உப்பிடுவதால் அது சுருங்கி தன் சாற்றைக் கக்குமாதலால் போஷணை குறையும். இந்த சாற்றில் மெத்த போஷணையான கூறுகளாகிய அல்பமினும் பாஸ்வர உப்புகளும் அடங்கி யிருக்கும். ஆகையால் நெடுநாளைக்கு உப்பு போட்ட இறைச்சியை சாப்பிடும் மாலுமி முதலானவர்கள் ஸ்கேவி (Scarvy) என்ற வியாதிக்கு இடமாவார்கள். இதில் ரத்தம் கெட்டு உடல் மெத்த தளர்ச்சி கொள்ளும். உப்புக்கு இறைச்சியின் தண்ணீர் பிரிவதாலும், அதற்குள் காற்று சுவறாதபடி இழைகள் சுருங்குவதாலும், உப்பும் தசையும் எளிதில் அழுகாத கலவையாக ஒன்றுவதாலும் உப்பு போட்ட இறைச்சி நாறாமல் இருக்கிறது.

(தொடரும்.)




# அகதிக்குத் தெய்வமே துணை.



மேலையூரில் கோபால ஐயர் மிக்க தனவான். இவருடைய மனைவி லக்ஷ்மீபாய் மிகுந்த அழகி. அவளுடைய முகம் சந்திர பிம்பம் போன்று பார்ப்பவர் மனதைக் கவரும் படி யிருக்கும். அழகும் குணமும் படைத்த பெண்மணி. லக்ஷ்மீபாய் கணவனே பிரத்யக்ஷ தெய்வமென்று எண்ணி கற்பு நிலை தவறாது வாழ்ந்து வந்தாள். அவ்வூருக்கு ஸமீபமாயுள்ள ஆடுதுறையில் ஒரு விவாகத்திற்காக கோபால ஐயர் தமது மனைவியை மட்டும் அனுப்பி வைத்தார். லக்ஷ்மீபாய் ஸர்வாபரண பூஷிதையாய்ப் பிரயாணமாகி வண்டியில் ஏறிக் கொண்டாள். அஸ்தமிக்கும் முன்னே கல்யாண வீட்டிற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும்படி கோபால ஐயர் வண்டிக்காரனுக்குத் திட்டம் செய்தார்.

குணமே உருவெடுத்து வந்தது போன்றுள்ள லக்ஷ்மீபாய் வண்டிக்காரனோடும் வண்டியிலேறிக் கொண்டு ஆடுதுறைக்கு ஸமீபத்தில் வந்து விட்டாள். அப்பொழுது சூரியன் அஸ்தமிக்க ஒரு நாழிகைப் பொழுது இருக்கும். வழியோ மணற்காடு. அங்குமிங்கும் நாணற்புதர்கள் விசேஷமாய் உண்டு. குறுக்கே ஒரு ஆறு ஓடுகின்றது. அதன் ஜலத்தில் சூரியனொளி ஸ்வர்ணத்தைப் போல் பிரகாசிக்கிறது. தென்றல் காற்று வீசுகிறது. பார்த்தான் வண்டிக்காரன். கொண்டான் மோகப்பித்தை. நிறுத்தினான் வண்டியை! "அம்மா கீழே இறங்க வேண்டும்" என்றான். லக்ஷ்மீபாய் சூது வினை யறியாமல் வெகு நாளாய் வீட்டில் இருக்கும் வண்டிக்காரனாயிற்றே; ஒரு வேளை மணலில் மாடு நடப்பது கஷ்டமாயிருக்கிறதென்று நம்மை இறங்கச் சொல்லுகிறான் போல் காணப்படுகிறதென்று கீழே இறங்கினாள்.

இயற்கை யழகும் செயற்கை யழகும் செறிந்து பொற்கொடி போல் விளங்கும் பெண்மணியாகிய லக்ஷ்மீபாயின் மேல் சூரியப்பிரகாசம் பட்டு இரத்தினங்களின் நடுவே இழைத்த ஸ்வர்ணாபரணங்கள் தகத்தகாயமாய் மின்னி பூர்ண சந்திரனைப் பழிக்கும் முகத்தில் பிரபையை வீசியபோது ஏற்கெனவே கொண்ட மோகப்பித்து வண்டிக்காரன் தலைமீ தேறியது. அவன் லக்ஷ்மீபாயைக் கிட்டித் தன் கெட்ட எண்ணத்தைத் தெரிவித்தான். அவள் நயமாயும் பயமாயும் பலவிதத்தில் புத்தி கூறியும் கேளாததால், கடைசியாகத் தன்

---

பிரபல டாக்டர்கள் எத்தனையோபேர்களைக் குணப்படுத்தத் தவறிப் போனாலும், அவர்கள்மீதுள்ள பிரமிப்புமட்டும் போவதில்லை. அதுவும் அவர்கள் அதிர்ஷ்டமே.

ஆபரணங்களை யெல்லாம் கழற்றித் தருவதாய்க் கூறினாள். அதற்கும் அவன் இசையவில்லை. இனி தெய்வமே கதியென்றிருக்க, வண்டிக்காரன் "அடி, எனக்கு இணங்குகிறையா, அல்லது இந்தக் கோடாலியால் உன்னை வெட்டட்டுமா?" என்றான்.

லக்ஷ்மீபாய் கற்பை யிழப்பதிலும் உயிரை இழப்பது மேலென்று கண்ணை மூடிக்கொண்டு பகவானைத் தியானம் செய்தாள். அப்போது வண்டிக்காரன் கோபங் கொண்டு கோடாரியால் கழுத்தை வெட்டுவதற்காக வீச, அது நல்ல வேளையாய் அவன் கையினின்றும் புறப்பட்டு சிறிது தூரத்துக்கப்பால் இருந்த நாணற் புதருக்குள் விழுந்தது. இதற்குள்ளாக லக்ஷ்மீபாய் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தாள். வண்டிக்காரன் வேகமாய் ஓடி நாணற் புதற்குள் விழுந்த கோடாரியைத் தேடிப் பார்க்கையில் ஒரு பாம்பு தன் மீது கோடாரி விழுந்த துன்பம் தாளாது துடித்தபடி அங்கே அவனை வெடுக்கென்று கடிக்கவே அவன் அலறுவதானான். பாம்பும் கோடாலியின் கனத்த அடி தாங்காது பிராணனை விட்டது.

கோபாலஐயருக்குத் தன் மனைவியை அனுப்பிய பிறகு என்னவோ மனதுக்குள் திக்திக் என்று அடித்துக்கொண்டு பரம வேதனையை விளைத்தது. மனைவி மீதே ஞாபகம் சென்றது. அவ்வளவு ஆபரணங்களோடு மாலை வேளையில் தனித்து அனுப்பியிருக்கக்கூடாதென்று எண்ணினார். ஆகவே கலவரப்பட்ட மனதுடன் சிலர் துணையோடும் அவ்வழியாய் வந்து கொண்டிருந்தார். தமது வண்டி நிற்பதையும், தமது மனைவி மூர்ச்சையாய்க் கிடப்பதையும் கண்டு திகைத்தார். பிறகு அவளுக்கு மூர்ச்சை தெளிய வைக்கவே, அவளும் நடந்த விஷயங்களைச் சொன்னாள். வேலைக்காரனைக் கோபத்துடன் தேடுகையில் நாணற் புதருக்குள் அவனுடைய சவமும் அருகில் இறந்த ஸர்ப்பமும் கோடாரியும் கிடக்கக் கண்டனர். லக்ஷ்மீபாயின் கற்பே அவளுயிரைக் காப்பாற்றியது. ஆதலின் நல்ல சித்த விருத்திகளை யுடையோருக்கு எப்போதும் ஈசுவரன் கிருபை செய்வாரென்பது இதனால் தெற்றென விளங்குகிறது. அகதிக்குத் தெய்வமே துணை. தர்மம் தலை காக்கும்.

**உழைக்கத் தெரிந்தவன் பிழைக்கத் தெரிந்தவன்.**

அவன் எவருக்கும் பாரமாக இரான். எவர் வீட்டிலும் ஒரு நிமிஷமும் தங்கான். ஆகவே எந்த வீட்டிலும் அவன் போன வேளைக்கு வா என்றழைத்து உபசரிப்பார்கள். ஆனால் அவ்வாறு செல்வதற்கு அப்படிச் சோம்பேரித்தனமான ஓய்ந்த ஒருபொழுது மட்டும் அவனுக்குக் கிடைப்பதில்லை. அப்படிப் பெறும் உபசரிப்புக்கும் கணக்கு வைத்திருந்து பதில் செய்து கடன் தீர்த்துவிடுவன்.

---

மனவெறுப்புள்ளவர்கள் வருகையில் எத்தனை நாள் இருப்பீர்கள் என்று கேட்பதில்லை. ரகசியமாய் பிறர் மூலமாகமட்டும் அதை அறிந்துகொள்கிறார்கள்.

# சிறுமணித்திரள்

## ஸாதியின் அமுத வாக்கு.

(606-ம் பக்கத் தொடர்ச்சி.)

517. கல்வி பரவுதற்கு வித்வான்களுக்கு வேண்டிய பணத்தைக் கொடு. துறவு நிலைக்க வேண்டுமானால் சந்நியாஸிக்கு ஒரு காசு கூடக் கொடுக்காதே.

518. ஒரு மதயானையை யெதிர்த்துப் போர்புரியும், வீரனைக் காட்டிலும், தன்னைப் பிறர் கடுத்தாலும், அவர் மேல் வெகுளாது நிதானமாகப் பேசுவோனையே உண்மை வீரனாகப் பெரியோர் மதிப்பர்.

519. மிருகங்களிற் சிங்கத்தை உயர்வென்றும், கழுதையை இழிவென்றும் கூறுகிறார்கள். ஆள் விழுங்கும் சிங்கத்தினும், சாந்தமாகப் பொதி சுமக்கும் கழுதையை மேன்மை யென்பது, அறிவினர் முடிவு.

520. கொடுங்கோலன் ஒரு சமூகத்தாரை ஆளவே முடியாது. ஏனெனில் ஒரு ஓநாய் ஆட்டிடையன் வேலையைப் பார்க்க இயற்கையில் ஏற்பட்டதில்லை. ஒரு கொடுங்கோல் மன்னன் தன் ராஜ்யத்தின் அரணைத் தானே இடிக்கிறான்.

521. ஓ மன்னனே! எளியவருக்கு இரங்கு; இல்லாவிடில், ஒரு வலிய சத்துருவினின்று போரை எதிர் பார்ப்பாய், கொடுங் கைகளாலும், உன் பலத்தாலும் ஏழைகளையும் திக்கற்றவர்களையும் துன்புறுத்தாதே. அவர்களை அட்டை போல் உறிஞ்சாதே.

522. ஆத்ம சுயேச்சை யடைந்தவனிடம் பணமும், காதலர் மனதில் பொறுமையும், மடவாயில் தண்ணீரும் நிலைக்காவாம்.

523. பகலில் தீவட்டி போடுவோன் இரவில் எண்ணெ இல்லாது விழிப்பான்.

524. ராஜ சேவை கடல் யாத்திரையைப் போல லாபமுள்ளது. ஆனால் அபாயமானது. அதனால் உனக்குக் கனகங் கிடைத்தாலும் கிடைக்கலாம். கடுஞ்சாவு நேர்ந்தாலும் நேரும்.

525. சூரியனுடைய அழகையும், ஒளியையும், நலத்தையும் கண்டும் பொதுவாய் ஜனங்கள் ஆர்வ முறுவதில்லை. ஏனெனில் அவன் வழக்கமாகத் தினந்தோறும் வருகிறானன்றோ?

526. பணத்தாசை யுடையவன் துறவியல்ல. துறவி பணத்தாசை யுடையவனல்ல.

527. நீ தூசியாகு முன் தூசி போலத் தாழ்மையுட னிரு.

528. சுதந்திரத்தின் சக்தி கொடுங்கோலினும் வலியது.

---

தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்கியில் பணம் போடுவோரைவிட, போட்டதைத் திருப்பி வாங்குபவர்களே அதிகமாயுள்ளார். இதிற் பயன் என்னே?

529. ஏ பணக்காரர்களே! உங்களுக்கு நியாய உணர்ச்சியும், எங்களுக்குத் திருப்தியும், ஏற்பட்டால் உலகின் துயர்கள் எவ்வளவோ நீங்கும்.

530. நமது தேவைகளைப் பிறரிடம் சொல்லியோசிப்பதினும், இருப்பதைக் கொண்டு திருப்தியுடன் வாழ்வது நலம். பணக்காரனிடம் ஒரு புது உடைக்காகக் கெஞ்சுவதினும், தனது கந்தையைத் தைத்துடுத்துவதே சிறந்தது. இரப்பதினும் பட்டினியோ டிருப்பது மேல்.

531. கடவுளைப்பற்றி எண்ணித் தோத்திரம்செய்து ஜீவிப்பதற்காகவே நாம் உண்ண வேண்டியது. வழக்கமாகவே, உலகில் பல கஷ்டங்களை அனுபவிக்கும் மனிதன் எந்தக் கஷ்டம் வரினும் ஜெயிக்கிறான். கண்டபடி தின்று கொழுத்து இடம்பமுள்ளவன், சிறு கஷ்டம் வந்தால் சகிக்க முடியாதவனாகிறான்.

532. மானங் கெட்டு வாழ்வதினும் மானமாய் இறத்தல் நலம்.

533. ஒருபொருள் கோரோஜனை என்பதை அதன் மணமே காட்டும். ஒரு மனிதன் கலையினால் நிபுணனென்பதை அவன் திறமையே காட்டும்.

534. ஏ துறவீ! நீ பூமியைப்போல் பொறுமையாயிருக்கப் பழகு. உன் புத்தகப் படிப்பை யெல்லாம் பூமிக்குள் ஆழமாகப் புதைத்து விடு.

535. ஒரு அறிவீனன் அறைபறை போன்று சத்தம் போட்டு, உள்ளே வெறுமையா யிருக்கிறான்.

536. தரித்திரம் அனுபவித்தவனுக்கே செல்வத்தின் சுகம் தெரியும்.

537. ஏ! அரசே, உன் படத்தை அந்தச் சுவற்றில் மாட்டி வைத்தால் யாவரும் பயத்தால் அதனருகே செல்லமாட்டார்கள். உனக்கு மோக்ஷத்தில் ஒரு இடம் கிடைத்து, இருப்பையாகில் எல்லோரும் நரகமே சுகமென்று போய் விடுவார்கள்.

538. ஏ கிழவீ! உன் வெளுத்த கூந்தலைக் கறுப்பாக்கினாலும், உன் வளைந்த முதுகை நிமிர்த்த முடியாது.

539. கழுதையை மெக்கா யாத்திரைக்குக் கூட்டிப் போனாலும், அது கழுதையாகவே திரும்பி வரும்.

540. தீர்ப்பு நாளில், கடவுள் "உன் வேலைகள் எங்கே" என்று கேட்பாரே யொழிய "உன் தகப்பன் யார்" என்று வினவார்.

541. கருமியானவன் பூமிக்குள் புதைந்தால் தான் அவன் பணம் பூமியை விட்டு மேலெழும்பும்.

542. ஒரு வனாந்திரத்தின் மணல் முழுதும் தங்கமும் முத்துமானாலும், ஒரு பேராசை பிடித்தவன் களிப்பது, ஐயமே.

543. முள்ளில்லாத ரோஜாவும், மயக்கமில்லாத கள்ளும் இல்லை. முத்தெடுக்கு மிடத்தில் ஆட்களைக் கொல்லும்படியான பெரிய மீன்களும் இருக்கின்றன. புதைத்து வைத்தால் அப்பணத்தருகே காலகோடி சர்ப்பம் வாய் திறந்து நிற்கிறது. உலக அனுபவம் என்ற தேனோடு தேனீயின் கடியும் சேர்ந்திருக்கிறது. நமக்கும் மோக்ஷத்திற்கும் நடுவே சாத்தான் இருக்கிறான்.

---

செலவுக்கும் வயிற்றுக்கும் இல்லாமல் வெகுபேர் தவிக்க, நன்றாகப் பென்ஷன் பெற்றுக்கொண்டு நல்ல வைபவமாய் விளங்கக்கூடியவர்கள்தான் தங்கள் உத்தியோக காலத்திலேயே வேறு உலகம் போய்விடுகிறார்கள்!

544. வெறுப்போடு பார்க்கும் கண்களுக்கு மன்மதனும் அழகற்றவனாய்த் தோன்றுகிறான். விருப்போடு பார்ப்போனுக்கு அரக்கனும் அழகனாகிறான்.

545. மெதுவாக விடாது நடப்பது, விரைவாக ஓடி மத்தியில் விழுந்து விடுவதினும் மேல். கொஞ்சதூரம் தாவியோடிக் களைத்துப்போகும் அரபிக் குதிரையினும், சேர்ந்தாற் போல நிதானமாய் நடக்கும் ஒட்டகம் வனாந்திரத்தை எளிதில் தாண்டுகிறது.

546. "ஏழ்மை எனது பெருமை" என்று ரசூல் சொல்வதைக் கவனியுங்கள்!

கா. அல்லாபிச்சை.


ஏன் விரோதம்? அதிக நேசத்தால்தான். அந்த நேசத்திலே அளவுக்குமீறி அதிக நம்பிக்கை வைத்துவிடுவதில், அவ்விதமே நடவாமற் போய்விடுவதில் மனது நோவுகொண்டு தூரப் பிரிகிறது. இதிலே என்ன கோபம் இருக்கினும், பழைய அன்பும் நட்பும் ஒரு பக்கம் நெஞ்சில் பழைய நேச நினைவுகளை உண்டாக்காதிராது. அதை மறக்க, வாடிக்கைப் பட்டவரை எண்ணாதிருக்க— மனதுக்கு சக்தியில்லை.

## ஆசை உயிருக்கு ஒரு ஜீவதாது.

மனிதனின் நீண்ட வாழ்வுக்கும், ஓயாது உழைக்கும் உழைப்புக்கும் ஆசையே காரணம். மனிதன் பிறக்கையில் ஆசையும் கூடப் பிறந்து, அவன் அழிகையில் அதுவும் அழிகின்றது. துறவிக்கும் மோக்ஷ ஆசை உண்டு. ஆசையற்றவனுக்கு இவ்வுலகுமில்லை; அவ்வுலகு மில்லை. இந்த ஆசை நல்லதிலோ கெட்டதிலோ செல்வது பூர்வஜன்ம குணத்தின் வாஸனையைப் பொருந்தியது. சகவாச குணத்தாலும் ஓரளவு மாறவல்லது. ஆசை உயிருக்கு ஒரு ஜீவதாது. ஆசையற்றுவிடில்—அல்லது ஆசையின்படி அநுபவிக்க முடியாதென்று நிச்சயமாய்விடுகையில், அவன் நிதானிப்பு என்பதைச் சோரானாகில்—அந்தக்ஷணமே தற்கொலைக்குத் துணிந்திட வைக்கும். ஆசையை அடக்கிச் செல்லுவோன் தான் அமரவாழ்வில் உயர்வான்.

கஷ்டமென்பதும், மஹா இன்பகரமென்பதும் எல்லாம் ஆரம்பத்தில்தான். பிறகோ பழகப் பழக அது மிகவும் சாதாரணமாய் விடுகிறது.

எந்த வீட்டுக்குள்ளும் சில நாள் தங்கினால், அந்த வீட்டின் குப்பைகளும் கோரணிகளும் உள் சங்கதிகளும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்துபோம்.



# பிரபஞ்சதரிசனம்





மனிதர்களுக்குள்ள பரஸ்பர சம்பந்தம் மிகவும் ஆச்சரியகரமானது. அந்த சம்பந்தம் பிரபஞ்ச மனத்தையும் ஒன்று கூடும்படி சங்கிலியின் பிணைபோல் கோர்த்துச் சேர்த்து விடப்பட்டிருக்கின்றது. இக்காலத்து நாகரீக விருத்தியாலும், போக்குவரத்துச் சாதனங்களாலும் வெவ்வேறான தூரமான இடங்களும் காலமும் அதிகமான தூர பேத வித்தியாசத்தை யுண்டுபண்ணாமல், பண்டங்களை வாங்குவோரும் விற்போரும் நேராக வந்து கூடினாற் போல உலக முழுதும் ஒரே விஸ்தாரமான வியாபார ஸ்தலமாய் மாறியிருக்கின்றது. அதே மாதிரி மற்ற உலக விவகாரங்களிலும் எல்லா தேசங்களும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஓரிடத்தில் விபத்துகள் உண்டாகி அவ்விடத்திய பொருள்கள் நமது பக்கத்துக்கு வரக் கூடாமற் போனால், இவ்விடத்தில் விற்கப்படும் அத்தேசத்துப் பொருள்களுக்கு உடனே விலை எறிவிடுகின்றது. இவ்விதமே உலகம் முழுவதுமே ஒரு மார்க்கட்டு போல் வியாபார ஸ்தலமாக அமைந்திருப்பது மிகவும் விசித்திரமாகும்.

***

மலையடிவாரங்களிலும் வனங்களிலும் வீடு வாசல் முதலியது ஒன்றுமில்லாமல் கிழங்குகளைப் புசித்துக் கொண்டு கேவலம் மிருக ஜாதிகளைப் போலத் திரிந்து கொண்டிருக்கும் காட்டு மனிதர்களை எடுத்துக் கொண்டாலும், அவர்களுக்கும் அன்னியர்களின் உதவியில்லாமல் தீராதென்றே தோன்றும். அவர்களும் மற்ற இடங்களிலிருந்து பல உதவிகளை எதிர்பார்க்கிறார்களென்றே புலப்படும். அவர்கள் அன்னியரது கூட்டுறவின் அபேக்ஷையை வேண்டாமலே காலந் தள்ளி விடுவதாய் வெளிக்குத் தோன்றினாலும் அது உண்மையல்ல. இத்தன்மையான காட்டு மனிதர்கள் எங்கேயோ சிலர் இருக்கிறார்களேயன்றி விசேஷமாகக் கிடையாது. இவ்வுலகத்தில் ஏறக்குறைய எல்லாத் தேசங்களிலும் நாகரீகம் சிலவற்றில் அதிகமாகவும், சிலவற்றில் உபாயமாகவும் பரவியிருக்கிறது. இப்படிப்பட்ட தேசங்களில் ஜனங்கள் அவரவர் வீட்டில் வைத்துக் கொண்டிருக்கும் பொருள்களையும் சாமான்களையும் பார்த்தால், அந்தப் பொருள்களையும் சாமான்களையும் செய்து கொடுக்க இத்தனை வேலைக்காரர்கள் தான் வேண்டியிருக்குமென்று கணக்கிட்டுச் சொல்வது முடியாது.

***

---

நாகரீகம் மிஞ்சிவிட்டது ! இனி ஸ்திரீகள் தங்களின் கற்பு நலத்தை யழித்துவிட்டதாகத் தங்கள் புருஷர்கள் மீதே வழக்கு தொடரவும் காலம் வருமோ யாதோ !

உலக முழுதும் பரஸ்பரம் சம்பந்தப்பட்டிருப்பதற்கு ஒரு உதாரணம் சொல்லுவோம். மிக்க ஐசுவரியம் பெற்று சகலவித போகங்களையும் அனுபவிக்கிற பணக்காரன் வீட்டிலுள்ள பதார்த்தங்களைப் பார்க்க வேண்டுமென்பதில்லை. ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை யென்று அன்றாடம் வேலை செய்து ஜீவனம் பண்ணுகிற அற்ப குடியானவன் வீட்டைப் பார்த்தால் போதும். மற்றொன்றும் வேண்டாம்; அவன் மேலே போர்த்துக் கொண்டிருக்கிற ஒரு துணியைப் பார்ப்போம்; அது எத்தனை வேலைக்காரர்கள் சேர்ந்து துணியாயிற்று? பருத்திச் செடிவைத்து வளர்ப்பவன், பஞ்சு எடுப்பவன், நூல் நூற்கிறவன், நெய்கிறவன் முதலான வேலைக்காரர்கள் வேண்டியிருக்கிறதுந் தவிர, இவர்களுள் ஒருவரிடத்திலிருக்கிற சாமானை மற்றொருவரிடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியதற்காக எத்தனை மூட்டைக்காரர்களும் வர்த்தகர்களும் வேண்டும்? அன்றியும் அநேக சாமான்கள் ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற்கு வெகு தூரம் போக வேண்டியிருப்பதால், எத்தனை கப்பல் வேலைக்காரர்களும், எத்தனை ரயில் வண்டி வேலைக்காரர்களும் வேண்டும்?

***

இது மாத்திரமோ! இந்த வேலைக்காரர்களின் ஆயுதங்கள் ஒவ்வொன்றையும் செய்து கொடுக்க இதரமான வேலைக்காரர்கள் கணக்கில்லாமல் வேண்டியிருக்கும். விசித்திரமான யந்திரங்கள் எத்தனையோ இருக்கின்றன; அவைகளெல்லாம் இருக்கட்டும்; மிகவும் அற்பமான சிறு கத்தியைச் செய்ய எத்தனை பேர் தேவையாயிருக்கிறது? இரும்பு வெட்டி எடுக்கிறவன் முதல் கன்னான் வரையுமுள்ள பல வேலைக்காரர்களுடைய கூட்டுத் தொழிலினால் கத்தி என்பது செய்யப்படுகிறது. ஒரு கத்திக்கு இத்தனை பேர் வேண்டியதென்றால் பெரிய ஆயுதங்களுக்கு எத்தனை பேர் வேண்டும்? இப்படி ஒவ்வொன்றையும் பார்க்கப் போனாலோ, சமுத்திரத்தில் இறங்குகிறது போலிருக்கும்; நுட்பமாய் விசாரிக்கிறதென்றால் கேட்க வேண்டியதில்லை. இன்னும் வளரும்.

***

இப்படி ஒரு அற்ப துணியைப் பிடித்துப் பார்க்குங்கால் இவ்வளவு தூரம் இழுத்துக்கொண்டு போனால், மற்றப் பதார்த்தங்களையும் தனித்தனியே இத்தன்மையாய் ஆய்ந்து பார்ப்பது எப்படிப்பட்ட காரியம்? இந்த விஷயத்தை உள்ளாழ்ந்து பார்ப்போமானால், ஒருவன் தனக்கு வேண்டிய சாமக்கிரிகைகளை யெல்லாம் தானே செய்து கொள்வது கூடாத காரியம் என்று விளங்கும். அநேகமாயிரம் பேர்கள் சேர்ந்து ஒருவர்க்கொருவர் ஒத்தாசையாக நின்று வேலை செய்யாவிடின் ஒன்றுமில்லாத ஏழைக்குக் கூட அவனுக்கு வேண்டிய அற்ப பதார்த்தங்கள் கூடக் கிடைக்கமாட்டா. மனிதர்கள் ஒவ்வொருவரும் தம்மால் கூடிய வேலையைச் செய்து, மற்றவர்கள் செய்யும் வேலைகளின் பிரயோஜனத்தைப் பெற்று இவ்வாறாக பரஸ்பரம் ஒற்றுமையாக வாழ்கிறார்கள் என்று நமக்கு நன்றாய் விளங்கும்.

***

மேற்கண்ட விவரங்களிலிருந்தும் நாம் க்ஷேமமாய் வாழ்வதற்கு பிரபஞ்ச

---

ஒருவனுடன் உறவாடி அவனது வியாபாரத்தின் சூக்ஷமங்களைத் தெரிந்து, பின் தான் உயர்ந்து கொள்ளச் சூதாக முயலுகிறான். என்ன முயன்றும் அவன் கைப்போக்கு நயம் இவனுக்கு வருவதுமில்லை, தெரிவதுமில்லை.

முழுதும் க்ஷேமமாய் வாழ வேண்டியிருக்கிறதென்று தெரிய வரும். இங்ஙனம் தெரியவரும் பக்குவத்தினுல் உலக விவகாரமனைத்தையும் அறிய வேண்டுமென்ற ஆவல் ஒவ்வொருவருக்கும் உதிக்கின்றது. நம் நிலைமையை நாம் அறிந்து விருத்தி செய்து கொள்வதற்கு, மற்றவர்கள் எப்படி முன்னுக்கு வந்தார்கள் என்பதையும் கவனிக்க வேண்டியவர்களாகிறோம். இப்படி எந்த விஷயத்துக்கும் ஓரிடத்தில் இருப்பவர்கள் மற்றோரிடத்திலிருப்பவர்களை எப்பொழுதுமே எதிர்பார்க்க வேண்டியவர்களாகி, இங்ஙனம் உலக முழுதுக்கும் ஒரு அற்புதமான பரஸ்பர சம்பந்தம் தொடரப் பெற்றிருக்கின்றது.

***

மேற்சொல்லியது உலக முழுதும் வியாபித்துள்ள முதன்மையான பரஸ்பர சம்பந்தமாகும். இனி மற்றொரு பரஸ்பர சம்பந்தம் இருக்கின்றது. அதாவது, ஒவ்வொருவரும் பொது நன்மையில் அக்கரை கொண்டு, இவ்விதம் அநேகம் பேர் சேர்ந்து பொதுவான அக்கரைகளை ஏற்றுக் கொண்டவர்களாகி, தங்களுக்குள் ஒரு கட்டுப்பாடு கொண்டு ஒரு ஜன ஸமூகமாக அமைந்து, பரஸ்பர சம்பந்தத்தை விருத்தி செய்து, அவற்றின் மூலம் அநுகூலங்களையும் முன்னேற்றத்தையும் அடைவதாகும். இப்படி முன்னேற முயற்சிப்பதிலே சீக்கிரத்தில் வெற்றியை எதிர்பார்ப்பதானது ஏமாற்றங்கட்கு அடிக்கடி இடம் கொடுத்து விடும். ஏனெனில், உலக அநுபவம் எவ்வாறு இருக்கிறதென்றால், ஒரு மனிதனுடைய விவகாரத்தில் இன்று செய்த காரியத்துக்குப் பல வருஷங்களுக்குப் பிறகு பிரதி பலனை எதிர்பார்க்க வேண்டியிருப்பது போல், ஜன ஸமூகத்தின் வாழ்க்கையில் ஒரு தலை முறை செய்கிற காரியங்களின் பலனை மறுதலை முறை அனுபவிப்பதே அரிதாகி, அந்தப் பலனைப் பெறுதற்கு நூற்றாண்டுக் கணக்காய் தாமஸப்படவும் வைத்து விடுகிறது. ஆகவே, அடிக்கடி நேரும் ஏமாற்றங்களால் மனம் தளர்ந்து போகாமல் பரஸ்பர சம்பந்தத்தை மேன்மேலும் பெருக்கி ஐக்கியக் கட்டுப்பாட்டை இன்னும் விருத்தி செய்து கொண்டே சென்று, அதன் பலனைப் பின் சந்ததியாருக்கு வைத்து விட்டு, இப்போது நாம் உழைப்பதொன்றையே நமது கடமையாகக் கருதிச் செல்ல வேண்டியவர்களாயிருக்கிறோம். இதுகாறும் கூறியவற்றிலிருந்தும், நாம் பரஸ்பர ஸம்பந்தம் கொண்டவர்களாயிருக்கிறோமென்பதும், ஒரு ஜன ஸமூகமாகச் சேர்ந்து ஒருவர்க்கொருவர் உழைப்பின் மூலம் உதவிபுரிய வேண்டியவர்களாயிருக்கிறோமென்பதும், பலனை எதிர்பாராமல் நமது கடமைகளைச் செய்ய வேண்டியவர்களாயிருக்கிறோமென்பதும் ஒருவாறு விளங்கும்.

---

குற்றத்தையே மெல்லும் துர்க்குணிகளுக்குக் கொஞ்சம் சந்து கிடைத்தால் போதும்; உடனே பழிப்பதற்குத் தொடங்கிக்கொள்ளுகின்றனர்!

---

குமாஸ்தா தனது முப்பது ரூபாய் உத்தியோகப் பெருமையில் எதிரில் நிற்பவரை அலக்ஷியமாய் நினைக்கிறார். அவர் தன்னைவிட மூன்று புத்து பங்கு ஸம்பாதிக்கிறவரென்று அந்த அற்ப குமாஸ்தா அறிவுக்குத் தெரிவதில்லை.

---

தன் வீட்டில், தானே இலையை எடுத்துப் போட்டுக்கொண்டு "சாதம் போடு" என்பதிலுள்ள உரிமையின் இன்பத்தை எங்குமே காணமுடியாது.




சடாமுனி.

ஒரு கதை. ஆங்கிலத்திலிருந்தும் ஸ்ரீமான் மு. நாக சுப்பராம பிள்ளை அவர்கள் மொழி பெயர்த்தது. பிடாரி நாடு, பூதம், அது சொல்லும் ஞான தத்துவங்கள்—இவற்றுடனே கதையும் காணப்படுகின்றது. இதன் விலை ரூ. 1

ஆத்திசூடி உரை.

ஸ்ரீமான் ராம சுப்பிரமணிய நாவலர் அவர்கள் இயற்றியது. இது உத்தமமான கைங்கரியம். "அறம்—நல்வினையை" என்பதை விட, "அறம்—தர்மத்தை" என்று எளிய சுலப நடையில் விளக்குவதுதான் சிறுவர் சிறுமியர்க்குப் பயன் தரும். அனுவசியமாக வாசக நடையை உயர்த்துவது அவசியமில்லை. சென்னைக் கிறிஸ்துவ கல்விச் சங்கத்தாரின் உரையைப் போல எவ்வளவு சுலபமாக எழுதப்படுகின்றதோ அவ்வளவுக்கும் அது சிறுவர் சிறுமியர்கட்கு விசேஷமாகப் பயன்படுவதாயிருக்கும். இதன் விலை அணு 4.

தமிழ்.

ஸ்ரீமான் ராமசுப்பிரமணிய நாவலர் அவர்களின் வாக்கு. தமிழின் இனிமையையும், அதன் அருமையையும் நன்கு விளக்கியுள்ளார். எதுகை, மோனை முதலிய செய்யுளுருப்புக்கள் தமிழிற்றான் முற்றிலும் பொருந்தியுள்ளன என்று அதற்கு உதாரணமாகப் பல செய்யுட்களையும் எடுத்துக் காட்டியுள்ளார். 12-பக்கங்கள் கொண்ட சிறு நூல். அணு 2.

'தமிழ் நாடு' விநோதப் படங்கள்.

"தமிழ் நாடு" பத்திரிகையில் முன்பு வெளிவந்த சித்திரங்களை ஒன்று சேர்த்து ஒரு அழகிய நூலாக்கப்பட்டுள்ளது. இது பழய விஷயங்களை மீண்டும் நினைத்துப் பார்த்துக்கொண்டு அறிவைப் பெருக்கிக் கொள்ள உதவும். இதைப் பெரிய புஸ்தகமாகப் பிரசுரித்தல் நன்று. இதன் விலை அணு 4.

பவாஹாரி பாபா.

இப் பெரியார் காற்றையே உணவாய்க்கொண்டு வாழ்ந்து, தமது மரண காலத்தை முன்னதாக உணர்ந்து, தமக்குத் தாமே தீயிட்டுக் கொண்டு சாம்பரானவர். இவரை நேரிலேயே தெரிந்திருந்த ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள் இவரைப் பற்றி ஒரு சிறு நூல் வரைந்தனர். அதன் தமிழ் மொழிபெயர்ப்பாக ஸ்ரீமான் R. இராமகிருஷ்ணன் பி. ஏ. அவர்கள் தமிழில் பக்திரஸத்தோடும் இனிமை ததும்ப மொழிபெயர்த்துள்ளார். இதன் விலை அணு 4.

அமிர்தம்.

ஒரு இனிய துப்பறியும் நாவல். இதன் ஆசிரியர் மேலைச்சிவபுரி ஸ்ரீமான் திரு. சோ. பனையப்ப செட்டியார்

---

குமாஸ்தாவாக ஒரு காரியாலயத்தில் நுழைந்தால் எல்லாம் கண்டு கற்றுவிடலாமென்கிறார்கள். ஆனல் எஜமானின் புத்தி சூக்ஷமத்தை மட்டும் கற்க முடிகிறதில்லை. அதற்கான அறிவு கூடியவர்களுக்கே அது முடிகிறது.

அவர்கள். இப்பெரியார் ஏற்கெனவே நான்கு நவீனங்களை வெளியிட்டுள்ளார். நல்ல கடிதமும் அழகிய பதிப்பும் கொண்டது. கதையும் வசீகரமாயுள்ளது. வக்கீலின் தக்ஷணையும், ஸப் இன்ஸ்பெக்டரின் வர்ணனையும், சோமசுந்தர முதலியின் பெண்ணாசையும், கோபாலையரின் கோணல்களும், அமிர்தத்தின் உயரிய காதலும் வாசிக்க மிக்க ருசிகரமாயுள்ளன. ஆங்காங்கு செறிந்துள்ள அநுபவஞான உரைகளும் கருத்திலிருத்தத்தக்கன. வாசக நடை மிக இனிமை. விலை அணா 8.

**இராஜகுல தீபிகை.**

இது ஒரு மாத ஸஞ்சிகை. பிரபல ஆசிரியர் ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்கராஜுகாரு இதன் பத்திராசிரியர். அங்கத்தினரல்லாதார்க்கு வருஷ சந்தா ரூ. 1. சென்னை சைதாப்பேட்டை 'ஜெகநாதபாக்'கிலிருந்தும் இது வெளிவருகின்றது.

தக்ஷிண ஆந்திர க்ஷத்திரிய ராஜுகுல ஸமூகத்தினரின் அபிவிர்த்தி கருதி இது வெளியிடப்படுகிறது. இப்பத்திரிகையில் ராஜு குலத்தினர்கட்கு உபயோககரமான விஷயங்கள் இனிய தமிழில் நிறைந்துள்ளன. பத்திரிகைக்கருவி ஸமூக முன்னேற்றத்திற்கு ஒரு பலமான ஆயுதமாகும். இப்பத்திரிகை மேன்மேலும் உயர்வெய்துவதாக. வெகு துரிதமாய் ராஜுகுல ஸமூகத்தின் அபிவிர்த்திக்கான கைங்கரியங்கள் நடந்தேறி வருவதை நோக்கி, ராஜுகுல சங்கத்தின் அக்கிராஸனரான ராய் பகதூர் ஸ்ரீமான் ஜே. செல்வ ரங்கராஜுகாரு அவர்களைப் பெரிதும் பாராட்டுகின்றோம். உண்மையாகவே முன்வந்து மனஸ்பூர்வமாய் உழைக்கிற இவரை யொத்த தலைவர்கள் ஒவ்வொரு ஸமூகத்திற்கும் தேவை.

## பிறரது க்ஷேமத்தை விசாரிப்பதில்லை!

பேசுவது எல்லாம் தன் வர்த்தகத்தைப் பற்றியே. தன் கடையில் வியாபாரம் பெருக என்னென்னவழி யென்ற விசாரிப்பே தவிர, தான் கேட்பவனின் கடை பெருக அவனுக்கு ஒரு யோசனையும் கூறுவதில்லை. அவன் விர்த்தி கொள்ள தன் கடையின் மர்மத்தை அவனுக்குத் தெரிவித்துக்கொடுப்பதுமில்லை. அவன் க்ஷேமத்தை எண்ணுவது மில்லை. அவனால் தனக்கு ஆகவேண்டிய உழைப்பையும், அவனிடமிருந்து பெறக்கூடிய புது யோசனைகளையும் பெற்றுக்கொண்டு அம்மட்டில் மிக்க சாதுர்யமாகத் தூர ஒதுங்கிவிடுவது. இதற்கே சிநேக தந்திரம் என்று பெயர்.

---

ஒருவனை ஏமாற்ற நினைத்ததின் பலனாக, பிறகு அவன் தன் கடைவியாபாரத்திற்கே பெரிய போட்டி மனிதனாகக் கிளம்பிவிடுகிறான். அவனுக்கு அந்தப் புதிய எண்ணமானது ஏமாற்ற முயன்றவனாலேயேதான் உண்டானது.




1. தாசித் தரகர் :—தாசிமோகத்தில் சிக்கி, கைவரண்ட மைனர்கள் அந்த மயக்கம் தெளியாத அவஸ்தையாலும், பொருளில்லாத ஏக்கத்தினாலும் வாதைப்பட்டு தாசிகளின் முகத்தைப் பார்த்துப் பார்த்துப் பேசிக் களித்தேனும் தங்கள் ஆவலைத் தணித்துக்கொண்டு மகிழ, இந்த மானஈனமான 'மாமா' வேலையில் மண்டிபோடுகின்றனர். பெண் பித்துக் கொண்ட சுயமதிப்பில்லாத சோம்பேறித் துரைகளும் நவநவமான சுந்தரர்களை 'அம்மணி'களிடம் அழைத்து வந்து விட்டு வயிறு வளர்க்க உட்கார்ந்து விடுகிறார்கள்! ஆணுருக்கொண்ட இந்தப் பெட்டைமார்களின் செயலில் உத்தம குடும்பங்கள் கெடுவது கொஞ்சமல்ல.

2. மறைந்த பின்னர் எழும் மதிப்பு :—இறந்தபின்தான் ஒருவனைச் சிலாகித்து 'மகா அருமையான மனிதன்; வல்லமைசாலி; யோக்கிய புருஷன்' என்று பேசுவது. காணாமற் போன பிற்குதான் அந்த சாமானின் அருமையை நினைத்து நினைத்து வருந்துவது. ஞாபகத்தில் தோன்றி மறந்துபோன சங்கதியைத்தான் மகா அரிய விஷயமாக எண்ணித் தவிப்பது. இரவல் கொள்ளையில் பறிகொடுத்த புஸ்தகந்தான் கிடைக்காத பொக்கிஷமென்று ஏங்கி வாடுவது. நெடுநாளாய் நம்மைவிட்டுப் பிரிந்துள்ள அன்பினரின் தரிசனத்தைத்தான் மிகவும் ஆவலாக நாடுவது.

3. பந்துக்கள் சங்கதி :—ஒரு பக்கம் கதறிக் கண்ணீர் விடுகிறார்கள். மறுபக்கம் இந்த உறவினரோ ஊர் வம்புகளையும், உதவாத விவாதங்களையும் இழுத்துப் போட்டுக்கொண்டு துக்க வீட்டில் மல்லுக்கு நிற்கிறார்கள்! வெகு வெகு நீள வேதாந்தம் பேசுகிறார்கள். அவர்கள் பேச்சுக்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம் போலும்!

4. யார் விசாரிக்கச் சொன்னார்கள்? :—'காலரா' கண்டு அவன் உயிர் ஆச்சு போச்சு என்று ஆய்விட்டபோது 'நாம் போய்ப் பார்த்தால் அந்தக் 'காலரா' வியாதி நம்மையும்' 'பிடித்துக்கொள்ளுமென்று வீட்டுக் கதவைச் சாத்திக்கொண்டிருந்துவிட்டு, அவன் பிழைத்தெழுந்தவுடன் வெகு அக்கரையுள்ளவர்கள் போல் அபிநயித்து "இந்தக் கண்டத்துக்குத் தப்பினையா?" என்று விசாரிக்க வெகு உருக்கமாய் வருகிறார்கள். இந்த ஒப்பாரி விசாரிப்பு இல்லையென்று யார் அழுதார்கள்?

5. உத்தியோக அவதி :-"வெளியூருக்குப் போகிறாயா? எப்போ வருவாய்?" என்று வியாதிப் படுக்கையிலிருந்துகொண்டே தாய் கேட்கிறாள். மகன் கண்ணீர் வடியும் வதனத்தைத் துடைத்துக் கொண்டே "சீக்கிரம்

---

உடனே வந்து உடனே புறப்படுகிற விருந்தாளிக்குத்தான் அதிக உபசாரணை! உண்மை நண்பர்களுக்கு அப்படி உடனே புறப்பட்டுவிட மனதும் வருகிறதில்லை. அந்தத் தடபுடல் உபசாரணைகளையும் விரும்புவதில்லை.

வந்துவிடுகிறேனம்மா. போனவுடன் கடிதம் எழு———" என்பதற்கு மேல் அவனால் பேசமுடியாமல் துக்கம் தொண்டையை யடைத்துக் கொள்ளுகிறது. தாயும் அழுகிறாள். பக்கத்திலிருப்பவர்களும் கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிறார்கள்! வியாதியால் வாடும் தாயை விட்டுப் பிரிய அவனுக்கு மனம் சம்மதிக்கவில்லை. வீட்டில் தங்குவதற்கோ 'லீவ்' இல்லை. ஆ! உத்தியோக நிர்ப்பந்தமே! வயிற்றின் கொடுமையே!

6. பிரிவைச் சகியாமை:— கொஞ்ச நாள் கூடிக் களித்து மனம் விட்டுப் பழகினவர் பிரிந்து செல்லுவதென்றால் அது மனதுக்கு எவ்வளவோ துக்கத்தையும் ஆற்றாமையையும் அளிக்கிறது. இதில் கண்ணீர் விடும் அன்பு மனத்தினர் எத்தனையோ பேர். தன் நண்பனை ரெயில்வே ஸ்டேஷன் வரையிலும் கூட்டிச் சென்று அவனை ரெயிலேற்றி, விட்டுப்போக மனமில்லாமல் நண்பனைப் பார்க்கிறான். அவன் "போய் வரட்டுமா?" என்றதும் இவன் கண்களில் மளமளவென்று நீர் ஊற்றெடுத்துப் பெருகி விடுகிறது. அவனும் தன் கண்களைத் துணியால் மூடிக்கொள்ளுகிறான். இனி ஒருவர்க்கொருவர் சந்தித்துப்பேச பல மாதங்களாகுமே என்கிற ஏக்கத்தினால் அவர்கள் மனம் துயரத்தைப்பெருக்கிக் கண்ணீர் வடிக்கச் செய்து விடுகிறது. அன்பு குலாவிப் பிரிய நேர்ந்தவர்களுக்கே இதன் அருமை தெரியும்.

T. S. குழந்தைவேல் முதலியார்.



மனுஷ்யன் மிக்க கேவலமானவன். எனினும் அவனது ஆத்ம சக்தியும் மூளையின் உழைப்பும் உலகையே பிரமிக்க வைக்கும். அந்த உழைப்புக்கும் சக்திக்குமே மதிப்பு. பிரஸித்தி பெற்றவர்களை அவர்தான் என்று அறியாமல் எத்தனையோ பேர் அல்பமாய்க்கருதி அவமதித்துள்ளார். ஆகவே, பெயருக்கே மதிப்பு. அப்பெயருள்ள தேகத்திற்கு அதை அறியாதார் முன் மதிப்பில்லை. அறிந்தவர்களும் அலக்ஷியம் செய்வது அருமை புணராத மடமையால்.

---

சில அபின் கஞ்சாக்கடைகளில் திராசின் கோணலும் பழுதும் பகலிலேயே மோசங்களும் அதிகமென்றும், வாங்கும் சரக்கை திராசின் இரண்டு தட்டுகளிலும் போட்டு எடை பார்க்க வேண்டுமென்றும் ஒருவர் கூறுகிறார்.

---

புகழ்வாய்ந்த அநுபவ ஞானியாகிய "மஹா விகடதூதன்" பத்திராதிபர் தமது பிணி நீங்கி ஆரோக்கியமாக இருந்துவருகிறார். அநுபவத்தின் ஒரு தனி ருசிகரத்தை முதலில் தமிழ் நாட்டிற்குப் புகட்டியவர் அவரேயாவர்.

---

ஒருவரின் வீட்டு ரகசியங்களைத் தெரிந்துகொள்ள விரும்பினால், அவர் வீட்டுப் பெண்ணை நம் வீட்டுக்கு ஒரு விசேஷ விருந்துக்கு அழைத்து நமது பெண்களிடம் விட்டுவிட்டால் போதும்! எல்லாம் வெளிவந்து விடும்!




(582-ம் பக்கத் தொடர்ச்சி.)

## Letter XVII

But this kind of felicity is always abated by the reflection, that they with whom we should be most pleased to share it, are now in the grave. A few years make such havoc amongst the human race, that we soon see ourselves deprived of those with whom we entered the world. The man of enterprise, when he has recounted his adventures, is forced, at the close of the narration, to pay a sigh to the memory of those who contributed to his success: and he that has spent his life among the gayer part of mankind, has quickly his remembrance stored with the remarks and repartees of wits, whose sprightliness and merriment are now lost in perpetual silence. The trader, whose industry has supplied the want of inheritance, when he sits down to enjoy his fortune, repines in solitary plenty, and laments the absence of those companions with whom he had planned out amusements for his latter years; and the scholar,

## 17-ம் கடிதத் தொடர்ச்சி.

ஆனால் இவ்வகையான ஸந்தோஷத்தை நாம் கூடி அனுபவிக்க மிகவும் உரித்தானவர்கள் இப்போது காலஞ் சென்றுபோய் இருப்பதை நினைக்கும்போது அந்த ஸந்தோஷம் குறைந்தே போகின்றது. சில வருஷங்களுக்குள்ளே மாந்தருள் வெகுபேர் மடிந்து போகின்றபடியால் உலகத்திலே நம்முடன் மருவிய பேர்களும் கொஞ்சத்துள் இறந்துபோகக் காண்கின்றோம். ஒரு பெருங் கருமத்தை முடித்திருப்பவன் அதைச் செய்த வகைகளைச் சொல்லி முடித்தவுடனே அதற்காகத் தனக்கு உதவியாக இருந்தவர்கள் இறந்துபோனதை நினைத்துத் துக்கப்படுகிறான். ஸந்தோஷகரமாய் இருந்தவர்களோடு கூடியிருந்தவன் அந்த ஸந்தோஷமும் மகிழ்ச்சியும் அற்று இப்போது இறந்துபோயிருக்கும் அவர்கள் உயிருடன் இருந்தபோது எடுத்துக்காட்டிய நியாயங்களையும் சமயோசித உத்தரங்களையும் திடீரென்று நினைப்பான். பிதுரார்ச்சிதம் இல்லாமல் தன் பிரயாஸத்தினாலே தனம் தேடிய வியாபாரி அந்தத் தனத்தைப் பிற்காலம் அநுபவிக்கத் தொடங்கும்போது அக்காலத்தின் ஸந்தோஷத்துக்கு அடுத்தவைகளைத் தன்னுடன் கூடி ஆலோசித்திருந்த நேசர்கள் இறந்துபோய்த் தனிமையாய் நின்ற தன்னிடத்திலிருக்கும் பொருளை நினைத்துத் துயரப்படுவான்: வித்தையிலே நெடுங் காலம் உழைத்து அடைந்த யோக்கியதையால் வறுமை நீங்கி உயர்ந்த

whose merit, after a long series of efforts, raises him from obscurity, looks round in vain from his exalted state, for his old friends, to be witnesses of his long sought for affluence, and to partake of his bounty.

வித்துவானுகினவன் தான் தேடிய ஐசுவரியத்தைக் கண்ணினல் பார்க்கவும் தான் செய்யும் உபகாரங்களைப் பெற்றுக் கொள்ளவும் அவ்வுயர்வான அந்தஸ்திலிருந்து இறந்துபோயிருக்கும் தன் பழய சிநேகிதர்களை வியர்த்தமாகத் தேடுகிருன்.

[அடுத்த ஸஞ்சிகையில் இக்கடிதம் முடிவு பெறும்.]




"அமிர்த குணபோதினி" பத்திராசிரியரவர்களுக்கு,

* * * எங்கள் வாசகசாலையில் "அமிர்த குணபோதினி"யை ஒரு வரி விடாமல் வாசியாதவர்கள் ஒருவருமில்லை. மாதா மாதமும் அந்தப் பத்திரிகைக்கு எதிர்பார்க்காதவருமில்லை. அமிர்தம்போல் அதில் கண்டிருக்கும் வாக்கியங்கள் மிகவும் வாசகர்களுக்கு நன்மை தருகின்றன. மேலும், தாங்கள் பிரசுரம் செய்து வரும் வியாசங்கள் முதலானவை எந்த வேதத்துக்கும் சம்பந்தப்படாமல்எல்லா ஜனங்களுக்கும் பொதுவாக நல்ல ஞானமும், போதனையும், ஊக்கமும், புத்தியும் படிப்பும் காட்டுகிறது. பத்திரிகையை அநேக பிரிவுகளாக வகுத்து அந்தந்த வகையில் விடாமல் தொடர்ந்துகொண்டு வருகிறதானது வெகு நேர்த்தியாகவும் சாமர்த்தியமாகவும் இருக்கிறது. ஒரு வார்த்தையாவது வேதத்துக்கு விரோதமாய் எழுதவில்லை. தாங்கள் இவ்வளவு பிரயாசைப்பட்டு நடத்திவரும் பத்திரிகைக்கு இன்னும் அநேக சந்தாதார்கள் சேரவேண்டியது அவசியமாயிருக்கிறது. ஒவ்வொரு சந்தாதாரரும் ஒரு புது சந்தாதாரரைச் சேர்த்து அனுப்பினல் எவ்வளவோ நலமாயிருக்கும். நான் இதுவரையில் அநேகருக்கு எனக்கு வரும் பத்திரிகையைக் காண்பித்து எவ்வளவோ சந்தாதாரரைச் சேர்த்து அனுப்பியிருக்கிறேன். இந்தப் பத்திரிகையை இன்னும் உற்சாகத்தோடு நடத்திவர ஒரு நிதி எற்படுத்தி அதற்குப் பரிசு முதலானவைகள் கொடுத்தால் இன்னும் அநேக ஆயிரம் சந்தாதாரர்கள் சேரலாகும். அதற்கு வழிகாட்ட நான் முதன்முதலாக ரூபாய் இரண்டு அனுப்பியிருக்கிறேன்.

பாஷியம் பாப்பையா நாயுடு,
சுரோத்திரியந்தார், பன்னூர்.

[இக்கனவானின் நன்கொடையை அன்புடன் ஏற்றுக்கொண்டு நன்றி தெரிவிக்கின்ருேம். மற்றுமுள்ள கண்ணிய சிரேஷ்டர்களும் இவரைப் பின்பற்றிப் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து உதவினல் அது வழி நடப்பவர்களுக்கு வாகனம் கிடைத்தது போலாகி, பத்திரிகையை இன்னும் விசேஷமுடையதாய் மேன்மையுறச் செய்ய மிகவும் சௌகரியமா யிருக்கும். அன்பர்களின் கருணைக்கு எதிர்பார்க்கின்ருேம். ப-ர்.]

# சென்ற மாதம்

"ஒரு கை தட்டினல் ஓசை எழும்புமா?" என்பது போல, சென்ற மாதம் சென்னைக்கு வந்த சைமன் கமிஷனுக்கு அரசினர் மட்டும் நல்வரவு கொடுத்தனர். அன்னோருடன் சில பிரமுகர்களும் கலந்து கொண்டனர். பொது ஜனங்கள் ஏகமனதாய் பஹிஸ்காரம் செய்தனர். இருகையும் பலக்கத் தட்டுமாறு இக் கமிஷன் இருந்திருக்க ஒண்ணுதா?

**சென்னையில் சைமன் கமிஷன்.**

***

"ஒரு கூடை கல்லும் தெய்வ மானல் கும்பிடுகிறது எந்தக்கல்லை?" என்று செங்கற்பட்டில் கூடிய "சுயமரியாதை நாடு" கேட்கின்றது. ஒரு பனை, இரண்டு பாளை, ஒன்று நுங்கு, ஒன்று கள்ளு; அறிவுடன் பார்க்கும்போது அதுவும் கள்ளே, இதுவும் கள்ளே. எதிலும் தாரதம்மியம் தெரிந்து நல்லதைக் கிரகிக்கவேண்டும். குற்றமே கூறினல் மணலோடு கலந்த ஜலமென்று எந்த நீரையும் ஒதுக்கித் தாகத்திற்குத் தவிக்கவே நேரும். சந்தேகம் பெரிய ரோகம். தர்க்க புத்தி சில சமயங்களில் அறிவை வளர்த்து நலமே செய்யினும், மதவிஷயங்களில் பெரும்பான்மையாக ஸமரஸத்தையும் முக்கியமாக உண்மையன்பையும் கொன்றுவிடுகின்றது. உள்ள அற்ப சொற்ப நன்மனதும் மாசுபட்டு விடுகிறது. அன்பே கடவுள் என்று கருதி, அந்த மகத்தான அன்பு ஒன்றினையே எங்ஙணும் நோக்கி, பரவச ஹிருதயமாய் அந்த அன்பின் வழியிலேயே பரமாத்மாவையும் கண்டடைய வேண்டுமென்றஸங்கல்பமுள்ளவர்கட்கு "ஆராய்ச்சி"களில் சிந்தை செலுத்திக் காலத்தை வீணுக்க விருப்பமிராது. குணப்படுகிற வியாதிக்கு ஒரு மிளகும் நாலு உப்பும் போதுமென்பதால், நமது ஹிருதயம் அன்பின் வழியிலேயே சிறுகச் சிறுகச் சென்று குணப்பட்டுத் தூய்மை கொண்டால் அதுவே நமக்குப் பெரும் பாக்கியமாகும்.

**சுய மரியாதை மகா நாடு.**

***

"கிட்டினல் ராமா கோவிந்தா, கிட்டாவிட்டால் ஒன்றுமில்லை" என்பதாக, இம்முறை புது வருஷ கௌரவப் பட்டங்கள் வெகு சிலருக்கே இருந்ததால் அநேகர் ராமா கோவிந்தா என்று துதிக்க முடியாமல் ஏமாற்றமெய்தினர். விசேஷமாக ராவ்சாஹிப் பட்டத்தின் அட்டவணையைத்தான் முதன் முதலாகப் பட்டம் பெறுவோர் கவனிப்பதுண்டு. இது ஒரு அதிர்ஷ்டச்சீட்டு மாதிரி தான்.

**புது வருஷ கௌரவப் பட்டங்கள்.**

---

கடியாரத்தை அடிக்கடி பார்த்துக்கொண்டு குழந்தைகளுக்கு வீட்டுப் பாடம் கற்பித்துக் கொடுக்கும் உபாத்தியாயர், தாம் கற்பிப்பதிலுள்ள சுறுசுறுப்பை விட, பாடத்தைச் சீக்கிரம் முடித்துவிட்டு விரைவில் எழுந்து போவதிலுள்ள சுறுசுறுப்பைத் தான் அதிகமாகக் கொண்டிருப்பார்.

**ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார்.**

"பொற்குடத்திற்குப் பொட்டிட்டது போல" சிதம்பரத்தை வித்தியா பீடமாகச் செய்த ஸ்ரீமான் ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கு அரசாங்கத்தினர் 'ராஜா' என்கிற கௌரவப்பட்டத்தைப் பரம்பரையாக உபயோகித்துக் கொள்ளும்படி வழங்கியுள்ளார். பொன் ஆபரணத்தைப் பார்க்கிலும் புகழ் ஆபரணமே பெரிது.

***

**மகாத்மா கைதியானார்.**

"மலையத்தனை சுவாமிக்குக் கடுகத்தனை கற்பூரம்" என்பதாக, மகாத்மா காந்திக்கு கல்கத்தாவில் சிறிய பூஜை யொன்று 4—3—29-ல் நடந்தேறியது. கல்கத்தாவில் அன்னியத் துணிகளுக்குத் தீயிட முயல, போலீஸ் கமிஷனர் அதற்குத் தடை உத்தரவு பிறப்பிக்க, அதற்குமீறி மகாத்மா காந்தி 50-ஆயிரம் ஜனங்கள் கொண்ட கூட்டத்தினிடையே அன்னியத் துணிகட்குத் தீயிட, போலீஸார் அதை அணைத்து மகாத்மாவையும், வங்காள மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசியான ஸ்ரீமான் கிரான் சங்கரராயையும் கைது செய்தனர். மகாத்மா 50-ரூபாய் ஜாமீனில் விடுவிக்கப்பட்டார். 26—3—29-ல் விசாரணை நடக்கும். மகாத்மா இனி 1930-ம் ஆண்டு தொடங்கப்போகும் ஒத்துழையாமைக்கு அரசினர் தங்களின் சக்தியைக் காட்டும் சிறு பூஜையாகுமிது. எந்த இயக்கத்தையும் அடக்க அரசினருக்கு அதிக அநுபவமும் வல்லமையும் உண்டு. எங்கும் வியாபகமான பத்திரிகையை அடக்க, அது வெளியிடப்படும் சின்னஞ்சிறு கட்டிடத்தைப் பிடித்து விட்டால் தீர்ந்துவிடும் என்பதையும் அரசினர் நன்கறிவர். ஆனால், இதன் பயனாகத் தோன்றும் ஜன உணர்ச்சிகளை மட்டும் அடக்கிவிட எந்த தேச சரித்திரத்திலும் சாத்தியமில்லா திருந்திருக்கிறது.

## மகாத்மாவின் சுதந்திர தாகம்.

நீங்கள் உங்களையும் தேசத்தையும் ஏமாற்றாதீர்கள். உங்களுடைய தேசத்தின் கௌரவத்தையும் சுதந்திரத்தையும் நிலைநாட்டுவதற்காக நீங்கள் எதையும் பெரிதென நினைக்காதீர்கள்.

---

சுதந்திரம் பெறவேண்டுமென்ற பித்து ஏற்பட்டிருப்பவனுக்கு ஏற்படும் வருத்தமானது, சாமான்யமாகப் பட்டினியால் ஏற்படும் வருத்தத்தை விட அதிகமாக இருக்கும்.

---

எனக்குச் சுதந்திரம் எப்படியாவது வேண்டுமென்ற தாகம் மிகுதியுமேற்பட்டிருக்கிறது. எனக்குற்ற எதையும் தியாகம் செய்து அந்தச் சுதந்திரத்தைப் பெற நான் முயற்சிப்பேன்.

---

இன்னும் கொஞ்சம் தூங்குவோமென்பதற்காகத் தன் சுறுசுறுப்பு மனத்திற்கு எவ்வளவு சமாதானங்களை ஒரு தூங்குமுஞ்சி சொல்ல ஆரம்பிக்கிறான்? அவன் மறுபடியும் தூங்குவதைவிட உழைப்பது மேல்.

# டைம்பீஸ் பரிசு விவரம்.

ஆயிரம் சந்தாதாரர்கட்கு 10-பரிசுகள் வீதம் பதினாயிரம் சந்தாதாரர்களுக்கு 100-பரிசுகள் என்று தீர்மானித்து 100-டைம்பீஸ்கள் இனாம் தருவதாக வெளியிட்டிருந்தோம். ஆனால், ஆயிரம் சந்தாதாரர்கள் வரையில் தான் முன்பணம் அனுப்பினர். மற்றவர்கள் வி. பி. யில் பெற்றுக்கொண்டனர். எனவே, ஆயிரம் சந்தாதாரர்கட்கும் 10-பரிசுகள் தான் தருவதற்குக் கணக்கு ஏற்படுகின்றதெனினும், இந்த ஆயிரத்துக்கே அந்த நூறு டைம்பீஸ்களையும் பரிசாகக் கொடுத்துவிடுவதென்று அவ்விதமே சீட்டுகளும் குலுக்கிப் போட்டு, பரிசு விழுந்த சந்தாதாரர்களின் நெம்பர்களை அடியில் குறிப்பிட்டிருக்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| K. 47 | A. 12 | For. 282 | P. 8 |
| A. 120 | R. 272 | K. 74 | S. 714 |
| K. 17 | N. 65 | D. 12 | M. 39 |
| V. 218 | S. 205 | M. 191 | B. 12 |
| T. 19 | R. 163 | J. 24 | V. 272 |
| P. 47 | R. 72 | R. 230 | M. 336 |
| A. 71 | M. 313 | D. 17 | T. 36 |
| P. 49 | R. 268 | R. 321 | B. 8 |
| B. 23 | N. 22 | K 287 | A. 31 |
| R. 71 | G. 41 | A. 36 | S. 679 |
| S. 283 | P. 138 | R. 148 | M. 78 |
| T. 9 | S. 210 | S. 280 | T. 41 |
| S. 39 | V. 275 | For. 229 | S. 352 |
| A. 38 | V. 41 | R. 265 | A. 151 |
| M. 200 | R. 337 | S. 66 | N. 68 |
| M. 149 | K. 151 | S. 161 | C. 40 |
| G. 91 | R. 247 | R. 376 | G. 54 |
| P. 17 | M. 36 | K. 138 | T. 5 |
| F. 67 | R. 332 | R. 67 | A. 50 |
| V. 125 | K. 30 | K. 22 | Loc. 10 |
| P. 30 | Loc. 8 | M. 134 | K. 226 |
| S. 379 | S. 133 | F. 137 | S. 129 |
| S. 92 | Loc. 133 | C. 22 | S. 433 |
| S. 560 | For 122 | R. 318 | R. 177 |
| K. 273 | A. 174 | S. 91 | C. 7 |

# ரகர—றகர பேதங்கள்.

(409-ம் பக்கத் தொடர்ச்சி.)

42. எரித்தல்—எரியச் செய்தல், எறித்தல்—ஒளி வீசல். (42) அவன் என் கூரைவீட்டை எரித்தலால், அயல் நிலம் எறியத் தொடங்கிற்று.

43. ஏரல்—கிளிஞ்சில், ஏறல்—ஏறுதல். (43) மாந்திரியனொருவன் ஆற்றில் கிடக்கும் ஏரலை ஒன்றுமேலொன்ருய் ஏறச் செய்தான்.

44, ஏராளர்—உழுநர், ஏறளர்—படைவீரர். (44) கழனியுழுது கொண்டிருந்த ஏராளரை, ஐதர் ஏறுளர் கலங்க மலங்க அடித்தனர்.

45. ஏருழவர்—உழவு தொழிலாளர், ஏறுழவர்—படைவீரர். (45) ஏறுழவர் தங்கள் அரசனுக்காகப் போர்புரிவர். ஏருழவர் பயிரிடுவதில் முயற்சியா யிருப்பர்.

46. ஏர்ப்பு—எழுச்சி, ஏற்பு—இரப்பு. (46) ஏற்பாரை ஏர்ப்பு செயல் பாவம்.

47. ஒருத்தல்—எருமை, ஒறுத்தல்—வருத்துதல். (47) காட்டிலிருக்கும் ஒருத்தலை வேட்டைக்காரர் ஒறுத்தல் செய்யும் வேளையில் புலி அவர்களின் மேற் பாய்ந்தது.

48. கரடு—கணு, கறடு—குன்று. (48) கரடுமுரடாயிருக்கின்ற கறடைக் கிரயத்துக்கு வாங்கினர் அந்தப் பிரபு.

49. கரத்தல்—ஒளித்தல், கறத்தல்—பால் கறக்குதல். (49) கறந்த பாலைப் பிறருக்குக் காண்பிக்காது கரத்தல்நலம்.

50. கரவை—கம்மாளர் கருவியின்று, கறவை—பால் மாடு. (50) சொக்கனுச்சாரி தன் கறவைத் துள்ளித் திரிந்ததால் கோபம் கொண்டு தன் கையிலிருந்த கரவையை விட்டெறிந்தான்.

51. கரா—முதலை, கறு—காடைக்குரல். (51) நீரில் இருக்கும் கரா காட்டிலிருக்கும் கறுவைப் போல் சப்திக்கின்றது.

52. கரீ—யானை, கறி, மிளகு. (52) காட்டில் திரிந்துகொண்டிருந்த ஒரு மதம் கொண்ட கரி நமது கறிப் பயிர் முதலியவற்றை யழித்துவிட்டது.

53. கரித்தல்—கார்த்தல், கறித்தல்—புசித்தல். (53) கரித்தபண்டம் கறித்தலுக்காகாது.

54. கருப்பு—குறுவிலைக் காலம், கறுப்பு—கோபம். (54) கருப்புக் காலத்தில்தான் குடும்ப நிர்வாகிகளுக்கு கனத்தகறுப்பு மிகும்.

55. கருள்—இருள், கறுள்—கடிவாளம். (55) அவன் மிக்க கருளாயிருந்த இன்றிரவு குதிரைக்குக் கறுள் போடாது ஏறிக்கொண்டு போனதால், அது துள்ளப் பள்ளத்தில் விழுந்தான்.

56. கரை—கரை எனல், கறை—குற்றம். (56) நான் அவன்செய்த கறையை நாளுக்குநாள் புளியைப் போலக் கரைத்து அவனைத் திரும்பவும் முன் போல் ஏற்றுக்கொண்டேன்.

(தொடரும்.)

மூன்றுவது வால்யம்
ஸம்பூர்ணம்.

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை. 1929.

சோற்பகாபிகளே கைவசமிருக்கிறது சீக்கிரம் முந்துங்கள்.

வெளிவந்து விட்டது ! வெளிவந்து விட்டது!!

1000 கைத்தொழில் முறைகளடங்கிய அருமையான நூல் வெளிவந்து விட்டது.

# கைத்தொழில் முறைகள்.

## இந்நூலில் மாதம் 100 ரூபா முதல் 500 ரூபா வரை சம்பாதிக்கக்கூடிய அரிய போதனைக ளடங்கி யிருக்கின்றன.

### இதிலுள்ள சில முக்கியமான தொழில் முறைகள்.

1. சைனு வெள்ளி செய்வது, 2. ஜெர்மன் சில்வர் செய்வது, 3. பாய்லர்களில் துருப்பிடிப்பதை நிறுத்த, 4. பித்தளைச் சாமான்களுக்கு வர்ணம் ஏற்ற, 5. மரத்திறகு பொன்னிற வர்ணம் ஏற்ற, 6. மூலாம் கொடுக்கும் பஸ்பங்கள், 7. மெழுகுவர்த்திச் செய்யுமுறை, 8. அலுமினியம் ஒட்டும் சிமெண்டு, 9. வச்சிரம் செய்யும் விதம், 10. ரப்பர் துண்டுகளை ஒட்டும் வச்சிரம், 11. இரும்புப் பொத்தல்களை அடைக்க, 12. உடைந்த சலவைக் கற்களைப் பிணைக்க, 13. செப்புப் பாத்திரங்களைச் சுத்தம் செய்ய, 14. வெள்ளை அல்லது கலர் சாக்குகள் செய்ய, 15. பாணவேடிக்கை மருந்துகள் செய்யுமுறை, 16. சிவப்பு, பச்சை, மஞ்சள், பொன்வர்ண பாணங்கள், 17. பூவர்த்தி கிழிக்கும், 18. கண்ணாடி சுத்தி, 19. கண்ணாடியில் பூ வேலைகள் செய்ய, 20. கண்ணாடியில் என்கிரேவ் செய்ய, 21. சகலவித வார்னீஷ்கள் செய்வது, 22. பலவித கறைகளைப் போக்குவது எங்ஙனம், 23. காப்பிக்கொட்டை சத்து, நன்னாரிவேர் சத்து, 24. பலவித இங்கிகள் செய்முறை, 25. தீக்குச்சிகள் செய்முறை, 26. தாதுபுஷ்டி லேகியம் செய்வது, 27. அயத்தங்கதிராவகம், 28. ஓமத் தைலம், 29. இரகசிய கடிதமெழுதும் இங்கி, ரப்பர் ஸ்டாம்பு இங்கி, 30. விசித்திர வர்ணங்கள் செய்வது, 31. பிரிலியண்டைன், 32. பிரெஞ்சு மயிர்வளருந் தைலம், 33. மயிர் கர்லிங் லோஷன், 34. பலவித சோப்புகள் செய்யு முறை, 35. திராவகக் கறைகளை போக்க, 36. கில்டு நகைகளை சுத்தம் செய்ய, 37. மூட்டுப்பூச்சிக்கு மருந்து, 38. கொசுநிவாரணி, 39. தலைமயிர் வளருந்தைலம், 40. நூதன உப்புமாவு செய்முறை, 41. பால்கோவா செய்முறை, 42. பூசிணிக்காய் அல்வா, 43. மைசூர் பாக்கு, 44. சென்னை சந்திரகலா, சூரியகலா முதலிய இனிப்புப் பதார்த்தங்கள் செய்முறை, 45.. பட்டுவஸ்திரங்களில் எண்ணெய் சிக்கெடுக்க, 46. சரிகையின் அழுக்கைப்போக்க, 47. தாம்பிர பஸ்பம், வெள்ளி பஸ்பம் செய்ய, 48. ரசகற்பூர மாத்திரை, 49. அயச் செம்பு, 50. ஜின்ஜர்பீர், இங்கிலீஷ்பீர், 51. எலிக்கடிக்கு எலக்டிரிக் சிகிச்சை, 52. கண்ணாடி சிமெண்டு, 53. துணிகளை மார்க்குசெய்யும் மை, 54. பிரெஞ்சு பாலீஷ், 55. பலவித பெப்பர்மிண்டுகள் செய்யும் விதம், 56. காலரா, ஆஸ்த்மா, கக்குவானுக்கு மருந்து, 57. சிரங்குக்கு மருந்து, 58. தேள் கடி மருந்து, 59. தலைமுழுக்குத் தைலம், வெட்டிவேர் தைலம், 60. ரோம சங்காரி செய்யும் விதம், 61. ஜெர்மன் மயிர்கறுக்குந் தைலம், 62. தாடிமீசை வளரத் தைலம், 63. மயிர் சுருட்டையாவதற்குத் தைலம், 64. ஓமம் வாட்டர், 65. பன்னீர் செய்முறை, 66. முகவசீகர பவுடர், 67. பல்லுக்குப் பேஸ்ட் 68, பலவித பற்பொடிகள், 69. முகவசீகர ஸெண்டு, 70. வாய்நாற்றம் நீங்க,

71. கூந்தல் வளரும் பரிமளத்தைலங்கள், 72. கடைச்சல் பிடிக்கும்போது மரம் வெடித்துப் போகாமலிருக்க, 73. அடுப்புமூட்ட நெருப்புத் துண்டுகள், 74. சாக்லெட் கிரீம், 75. குதிரைகளின் காயங்களை நீக்க, 76. குதிரைக்கும் மாட்டுக்கும் அநுபோக வைத்தியம், 77. சுலபமாக மீன்பிடிக்கும் விதம், 78. எலிகளை ஒழிக்க, 79. பலவித சிரப்புகள் செய்முறை, 80. வெள்ளையடிக்கும் நூதனமுறை 81. கெட்டஜலத்தை சுத்தமாக்கும் நூதன முறை, 82. பாம்புக் கடிக்கு கைகண்ட மருந்து, 83. தேகச்சூடு, மேகச்சூட்டிற்கு மருந்து, 84. தலைவலியை ஒரே நிமிஷத்தில் போக்கக்கூடிய அதிசய மருந்து, 85. மூங்கில் செடி உற்பத்திசெய்ப், 86, பலவித பிஸ்கத்துகள், செய்முறை, 87. பலவித மத்தாப்புகள் செய்வது, 88. சோடா வாட்டர் செய்முறை, 89. பலவித ஷர் பத்துகள் செய்வது, 90. லெம்ஜூஸ் அண்ட் கிளிஸரைன், 91. வெட்டுகாயத் திற்கு மருந்து, 92. பால்பெருங்காயம் செய்வதெப்படி, 93. இருமலுக்கு மருந்து, 94. தலையில் பூச்சி அரித்து மயிர் விழுவதைத் தடுக்க, 95. பூட் பாலிஷ்கள் செய்முறை, 96. கண்ணாடிகளை ஒட்டவைக்க, 97. விளக்குப் புகையாதிருக்க, 98. செடிகொடிகளைத் தின்னும் பூச்சிகளை யொழிக்க, 99. தோல் சாமான்களை சுத்தம்செய்ய 100. புட்டிகளை சுத்தம் செய்ய, 101. நகைகளின் அழுக்கை யெடுக்க, 102 வைரத்தைச் சுத்தம்செய்ய, 103. ஹார் மோனியம் கீபோர்டு சுத்தம்செய்ய 104. புத்தகங்களில் இங்கி பட்டால் எடுக் கும் விதம், 105. பீங்கான் ஒட்டும் அதிசயப் பசை, 106. தோல்பதம்செய்ய, 107. தேன் செய்யும் முறை, 108. வாசனைப் புகையிலை, 109. புத்தகங்களுக்கு தாமே கில்டுபோட, 110. சங்கீதம்பாட குரல் இனிமையாக்க, 111. அமோ னியாஜலம், 112. கர்ப்பஸ்திரீகளுக்கு மருந்து, 113. கண்ணெரிச்சலை தடுக்க, 114. கட்டிகளுக்கு மருந்து, 115. நாபிரணத்திற்கு மருந்து, 114. சுரம், பல் வலி உஷ்ணவாயுவுக்குக் கியாழம், 117. இங்கி அழிக்கும் ரப்பர் செய்வது, 118. காக்கை வலிக்கு பரிகாரம், 119. ஐஸ் செய்யும் முறை, 120. பலவித ஸெண்டுகள் செய்யும் முறைகள்.

நேயர்களே! சில முக்கியமான செய்முறைகள் மட்டும் இவ்விளம்பரத் தில் கூறப்பட்டிருக்கின்றன. இன்னும் இதில் இல்லாத ஆயிரக் கணக்கான முறைகள் புஸ்தகத்தில் உண்டு.

ஒவ்வொருவரும் அவரவருக்குத் தகுந்த முறையைச் செய்துபார்த்து வியாபாரம் செய்து ஏராளமாக திரவியம் சம்பாதிக்க வழியுண்டு. இந்நூலில் சொல்லப்பட்டிராத கைத்தொழில் ஒன்றுமே கிடையாது.

முக்கிய குறிப்பு:—இவ்விளம்பரத்தில் சொல்லி யிருப்பதைப்போல் புஸ் தகம் எந்த அம்சத்திலாவது மாறுபட் டிருக்கும்பட்சத்தில் எந்தக் காலத்தி லும் உங்கள் பணம் வாபீஸ் செய்யப்படும்.

300 பக்கங்களுக்கு மேற்கொண்ட கைக்கு அழகான பெரியநூல்; ஏரோ ப்ளேன் டிரேட் மார்க் உள்ளது.

விலை ரூபா 1—8—0

தி. இராஜகோபால் முதலியார்,
302, தங்கசாலை வீதி, மதராஸ்.

புதிய வருடம்! புதிய விஷயம்!!

# அமிர்த குணபோதினி

"அமிர்த குணபோதினி" என்னும் இந்த அரும்பெயர் கொண்ட பத்திரிகை மாதந்தோறும் தவருது வெளிவந்து மக்களின் உள்ளத்தைக் கவர்கின்றது. பத்திரிகை என்ருல் எல்லாம் பத்திரிகையாகாது. மாதச்சஞ்சிகைகளில் தற்போது முதன்மைபெற்று விளங்குவது அமிர்த குணபோதினியே யென்று கூறுவது எவ்வாற்ருனும் பொருந்துமென்பதில் தடையில்லை. அமிர்த குணபோதினியில் வெளிவரும் விஷயங்கள் யாவும் மேன்மையானவைகளேயாம். ஆகையால் அமிர்த குணபோதினி சிறந்த மாதப் பத்திரிகை என்று சொல்வதற்குத் தடையில்லை.

**மாதப் பத்திரிகை என்றல் என்ன?** நமது நாட்டில் இருப்போரிற் பலர் "பத்திரிகை என்பது எப்படி இருக்கும்?" என்று கேட்கக்கூடியவர்களாகவே யிருக்கின்றனர். பத்திரிகை நடத்த முன்வருவோர் பலருக்குத் தின, வார, மாதப் பத்திரிகைகள் எப்படி இருக்கவேண்டும்; அவைகளில் வெளிவரும் விஷயங்கள் எவ்வாறு இருக்கவேண்டும் என்றே தெரியாதென்று திண்ணமாகக் கூறிவிடலாம். மற்றவர்களை இகழவேண்டுமென்று நாம் இவ்வாறு கூற முன்வரவில்லை. அக்கருத்து எக்காலத்தும் இறைவனருளால் நமக்கு உண்டாகாதென்றும் நம்புகிரேம். நமக்கு வேண்டியது உண்மைதான். நமது நாட்டில் வெளிவரும் வாரப்பத்திரிகைகள் பல தினசரிப் பத்திரிகைகளையே நிகர்த்திருக்கின்றன. தினசரிப் பத்திரிகைகளுக்கும், வாரப் பத்திரிகைகளுக்கும் இருக்கவேண்டிய இலட்சணத்தை அறியாதவர்கள் பத்திரிகை நடத்த முன்வந்தால்பத்திரிகை எவ்வாறு பயன்பெறும்? இந்த நிலையில் நம்து நாட்டில் அடிக்கடி தோன்றி மறைந்தும், மறையாமல் இருந்தும் வருகின்ற மாதப் பத்திரிகைகளின் இலட்சணங்களைப் பற்றிச் சொல்லவேண்டிய அவசியமே கிடையாது. அவைகளில் அநேகம் குப்பைகள். பழங் கந்தல்களையே வாரிக்கொண்டு வெளிவருகின்றன. நவ நவமான கருத்துக்கள் அவற்றை நடத்துவோரின் மனத்தில் தோன்றுவதில்லை போலும். அவற்றில் சில பத்திரிகைகள் சமயத்திற்கு வேண்டாத முட்டாள் ஆராய்ச்சியையும், சில பத்திரிகைகள் இக்காலத்துப் பள்ளிக்கூடச் சிறுவனும் பார்த்து, "பழங் கந்தல்கள்" என்று ஒதுக்கக்கூடிய மத ஆராய்ச்சியையும், சில பத்திரிகைகள் பலமுறை பலர் வாயில் இருந்து வெளிவரக் கேட்டுக் கேட்டு அலுத்துப்போன 'கந்தல்' புராணங்களையும் கக்கிக்கொண்டிருக்கின்றன. பொதுவாக மாதப் பத்திரிகைகளை நடத்துவோரிற் சிலருக்கு மாதப் பத்திரிகைகள் எவ்வாறு இருக்கவேண்டும் என்னும் ஞானம் இல்லாமையினுல் அவர்கள் தத்தம் மனம் போனவாறு எழுதப்பட்ட விஷயங்களோடு தங்கள் பத்திரிகைகளை வெளியிடுகின்றனர். எப்படியாவது பணம் வந்து பெட்டியில் விழுந்து விட்டால் போதுமானது என்பது இத்தகைய ஆபாசப் பத்திரிகைகளை நடத்துவோரின் கருத்துப் போலும்! நம் நாட்டில் மாதப் பத்திரிகைகளை நடத்த முன்வருவோர் மேல்நாட்டினர் எவ்வாறு மாதப் பத்திரிகைகளை நடத்துகிருர்கள் என்பதைக் கவனிக்கவேண்டும். நமக்கே எல்லாம் தெரியுமென்னும் கர்வங் கூடாது. கூலிக்கு மாரடிக்கவும் கூடாது. பொய்க் கதைகளையும், கந்தல் ஞான விஷயங்களையும் பத்திரிகை முற்றிலும் நிரப்பக்கூடாது. அர்த்தமில்லாமல் பல விஷயங்களை எடுத்தெழுதிப் பத்திரிகைளின் பக்கங்களைச் சரிப்படுத்தி வருதல்

அழகாகாது. மாதப்பத்திரிகைகளில் ஒவ்வொருமாதத்திலும் நடைபெறும் உலக முக்கிய விஷயங்கள் சுருக்கமாக வரையப்படுதல் வேண்டும். நவ நவ மான விஷயங்கள் ஆசிரியருடைய மனத்தில் தோன்றி பத்திரிகைகளில் மிளிரவேண்டும். விநோதங்கள், வேடிக்கைகள் முதலியன காணப்படுதல் வேண்டும். எக்காலத்தும் நிலைக்கக்கூடியபல விஷயங்கள் நவநவமாக வெளிவரல் வேண்டும். விஷயங்கள் ஒவ்வொன்றும் அனுபவ ஞானத்துக்கு ஏற்றதாய் இருக்க வேண்டும். பொதுவாக ஒவ்வொரு விஷயமும் லௌகீக விஷயத்தில் மனிதனுக்கு உற்சாகத்தைக் கொடுத்து ஊக்கத்தை அளிக்கக் கூடியதாய் இருத்தல் வேண்டும். தற்கால உலகப் பந்தயத்தில் நமது மக்கள் வெற்றி யடைவதற்கேற்ற விஷயங்களே மாதப் பத்திரிகைகளில் வெளி வரல் வேண்டும்.

அமிர்த குணபோதினியானது, மாதப்பத்திரிகைக்கு இருக்கவேண்டிய இலட்சணங்களில் சிறிதும் குறைவுபடாமல் இருக்கின்றது. இவ்விஷயம் அமிர்த குணபோதினியின் ஒரே ஒரு மாதப் பத்திரிகையைப் படித்தவர்களுக்கும் தெரியும். வருடக் கணக்காக அமிர்த குணபோதினியைப் படிப்பவர்களுக்கு இவ்விஷயத்தைக் கூறுவது கொல்லத்தெருவில் ஊசி விற்பது போலாகும்.

அமிர்த குணபோதினியை விடாது தொடர்ந்து வாசிப்பவர்கள் உலக வாழ்க்கையில் சிறந்து விளங்குவார்கள் என்பது திண்ணம். அமிர்த குண போதினியில் வெளிவரும் விஷயங்கள் பொன்னே போல் போற்றற்குரியன.

## ஏன் அமிர்த குணபோதினியை வாசிக்க வேண்டும்?

ஏன் அமிர்த குணபோதினியை வாசிக்க வேண்டும் என்றால் அதன் ஆசிரியர் சிறந்த அனுபவசாலி என்று சொல்வோம். அவர் லௌகீகம் நன்றாய்த் தெரிந்தவர். அவர் வெறும் புத்தக மூட்டையன்று; அனுபவக் கடல். அவருடைய ஞானம் சுழித்துக் கொள்ளுவதன்று; நீண்டு செல்வது. அவர் பழைய—கெட்டுப்போன—உதவாத—பொருளை யுடையவரல்லர். எக்காலத்தும் எவரும் விரும்பும் பொருளை யுடையவர். உண்மையில் திருமிது இராமானுஜலு நாயுடு அவர்கள்—அமிர்த குணபோதினியின் பத்திராதிபர்—சிறந்த அனுபவஞான சாகரர். ஆகையால் அவர் பார்வையில் நடைபெறும் அமிர்த குணபோதினி அருமையானதென்று கூறவும் வேண்டுமோ?

அமிர்த குணபோதினியின் சொந்தக்காரராகிய திரு. இராஜகோபால முதலியாரவர்கள் குறைந்த சந்தாவில் பத்திரிகையை நமது மக்களிடையில் பரப்பி அவர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்னும் கருத்துடையவர்; சாந்தகுண சீலர்; ஊக்கம் நிறைந்த உள்ளத்தினர். மாதந் தோறும் தவறாது பத்திரிகை வெளிவரும் விஷயத்தில் இவர் கொண்டுள்ள முயற்சி போற்றற் குரியதே! ஐம்பத்தாறு பக்கங்களும், அரிய விஷயங்களும் உள்ள சஞ்சிகை வருட சந்தா ஒரு ரூபாவாக வெளிவருவது ஆச்சரியமாகும்.

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த அமிர்த குணபோதினியைத் தமிழ் மக்கள் தாழாது ஏற்று நன்மைபெற இறைவன் கருணை செய்யுமாறு, அவ் விறைவனைத் துதிக்கின்றோம்.

எஸ். எஸ். அருணகிரிநாதர்.